# கல்கி

KALKI
28.9.86
ரூ. 1.50

'விளையாட்டின் நோக்கம் வெற்றி மட்டுமா?'

— ஸ்ரீகாந்த் பேசுகிறார்

இந்த இதழில்:
தென்னாற்காடு மாவட்ட கலெக்டர் பேட்டி

# விளையாட்டின் நோக்கம் வெற்றி மட்டுமா?

## ஸ்ரீகாந்த் பேசுகிறார்



சென்னை சேப்பாக்கத்தில் பயிற்சி முகாம் துவங்குவதற்கு முந்தைய தினம் (12.9.86) காலை 9.30 மணி. தம் வீட்டுக்கு வெகு அருகே இருக்கும் அஷ்டலக்ஷ்மி கோயிலிலிருந்து அப்போதுதான் திரும்பியிருந்தார் ஸ்ரீகாந்த். நெற்றியில் குங்குமப் பொட்டும் கைநிறைய சாமந்திப்பூ பிரசாதமுமாக உள்ளே நுழைந்தவர் ''சொல்லுங்கள் சார்'' என்றபடி சோபாவில் வசதியாகச் சரிந்து உட்கார்ந்து கொண்டு சிகரெட்டைப் பற்ற வைத்தார். நாலைந்து ஃபோன் கால்களுக்கும் ஐந்தாறு சிகரெட்களுக்கும் . இடையே சுமார் ஒன்றேகால் மணி நேரத்திற்கு அவர் அளித்த பேட்டி:

கல்கி: உங்களைப் பார்த்தால் தெய்வ பக்தி அதிகம் உள்ளவராகத் தெரிகிறது. வினாயக சதுர்த்தி அன்று செஞ்சுரி அடித்திருக்கிறீர்கள். அதை ஒரு நல்ல சகுனமாகக் கொள்வீர்களா?

ஸ்ரீகாந்த்: நிச்சயமாக. எனக்குத் தெய்வ பக்தி ரொம்ப அதிகம். ஒவ்வொரு போட்டித் தொடரும் ஆரம்பிப்பதற்கு முன்னால் கட்டாயம் குருவாயூர் போய் வருவேன். அதேபோல் ஹனுமார், ஐயப்பன் மீதும் நிறைய பக்தி உண்டு. சூரியனைப் பார்த்து விட்டுத்தான் ஒவ்வொரு முறையும்

ஆட்டத்தைத் தொடங்குவேன். ஒவ்வொரு பந்தையும் சந்திக்கும் முன்பு சூரியனைப் பார்ப்பேன். என் பிள்ளைக்குக் கூட 'ஆதித்யா' என்று சூரியனின் பெயரைத்தான் வைத்திருக்கிறேன்.

கல்கி: விளையாட்டுகளுள் கிரிக்கெட்டை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?

ஸ்ரீகாந்த்: நான் வலியப் போய் அதைத் தேர்ந்தெடுக்கவில்லை. சிறு வயதில் எல்லாப் பையன்களும் ஆடுவது போல்தான் நானும் தெருவில் கிரிக்கெட் ஆடினேன். கண்ணாடி ஜன்னல்களை உடைத்து, அப்பாவிடம் அடி வாங்கி வளர்ந்தேன். எனக்கே தெரியாமல்தான் என் கிரிக்கெட் வளர்ந்தது.

கல்கி: நீங்கள் இந்தியாவுக்கு ஆட வேண்டும் என்று கனவு கண்டதில்லையா? ஆடக்கூடும் என்று நினைக்கவில்லையா?

ஸ்ரீகாந்த்: அந்த எண்ணமும் நம்பிக்கையும் நான் மூன்றாவது ஆண்டு எஞ்சினியரிங் படிக்கும் போதுதான் ஏற்பட்டன. அப்போதுதான் ரஞ்சியில் நுழைந்திருந்தேன். படிப்படியாக முன்னேறி இறுதியாண்டுப் படிப்பு முடிந்த கையோடு இருபத்தோராம் வயதில் முதல் டெஸ்ட் மாட்ச் ஆடினேன்.

கல்கி: முதல் டெஸ்ட் மாட்ச் அனுபவம் எப்படி...?

ஸ்ரீகாந்த்: ஓ! அதை எப்படி மறக்க முடியும்? இங்கிலாந்துக்கு எதிராக முதல் இன்னிங்ஸில் பூஜ்ஜியம்! இரண்டாவது இன்னிங்ஸில் பதின்மூன்று ரன்கள்! என்னிடம் ஏகமாக எதிர்பார்த்தவர்களுக்குப் பலத்த ஏமாற்றம்.

கல்கி: பாட்ஸ்மன் என்கிற முறையில் உங்கள் பலம் என்ன? பலவீனம் என்ன?

ஸ்ரீகாந்த்: என் பலம் என் கூர்மையான கண் பார்வை... என் பலவீனம் என்னுடைய பொறுமையின்மைதான்.

கல்கி: பௌலராக இருப்பதைக் காட்டிலும் பாட்ஸ்மனாக இருப்பது advantage என்பீர்களா?

ஸ்ரீகாந்த்: இடையவே இடையாது. சொல்லப் போனால் பௌலருக்குத்தான் advantage அதிகம். – ஒரு மோசமான பந்தில் கூட ஒரு பாட்ஸ்மன் அவுட் ஆகக் கூடும் என்பதால். ஆனால் all-rounder ஆக இருப்பதுதான் உத்தமம்! ஒருநாள் பந்தயங்களில் வேண்டுமானால் பாட்ஸ்மனின் ஆதிக்கம் அதிகம் என்று சொல்லலாம்.

கல்கி: நீங்கள் ஒருநாள் பந்தயங்களில் பிரகாசிக்கும் அளவிற்கு டெஸ்டுகளில் பிரகாசிப்பதில்லை என்று ஒரு குற்றச்சாட்டு இருக்கிறதே?

ஸ்ரீகாந்த்: சமீபத்தில் அக்குற்றச்சாட்டிற்கு இடமில்லாமல் செய்துவிட்டேனே. கடந்த ஆண்டு இலங்கையிலும் ஆஸ்திரேலியாவிலும் டெஸ்டுகளில் நன்றாகவே செய்துள்ளேன்.

கல்கி: ஒருநாள் பந்தயங்கள் மிகவும் பிரபலமாகி வருவதால் டெஸ்ட் மாட்சுகளுக்கு எதிர்காலமில்லை என்று சொல்லலாமா?

ஸ்ரீகாந்த்: அப்படியொன்றும் சொல்ல முடியாது. ஐந்து நாள் பந்தயங்களுக்கு ஒரு தனி அந்தஸ்தும் அழகும் உண்டு. ஐந்து நாள் பந்தயத்தில்தான் ஓர் ஆட்டக்காரரின் முழுத் திறனும் வெளிப்படுகிறது. கிரிக்கெட் ஒரு கலையாகப் பரிமளிக்கிறது.

கல்கி: மாட்சுகளின் நேரடி டெலிவிஷன் ஒளிபரப்பு ஆட்டத்தை நேரில் காண வருவோரின் எண்ணிக்கையைப் பாதிக்கிறதே?

ஸ்ரீகாந்த்: நிச்சயமாகப் பாதிக்கிறது. ஆஸ்திரேலியாவில் மாட்ச் நடக்கிற இடத்தைச் சுற்றி நூறு கிலோமீட்டர் பரப்பளவிற்கு நேரடி ஒளிபரப்பைத் தடை செய்துள்ளனர். இங்கேயும் அப்படிச் செய்தால் கூட்டம் அதிகரிக்குமோ என்னவோ?

கல்கி: இன்று பல தனியார் நிறுவனங்கள் பந்தயங்களில் சிறப்பாக ஆடுபவர்களுக்கு ஏராளமான பணமும் விலையுயர்ந்த பரிசுகளும் தந்து தங்களுக்கு விளம்பரம் தேடிக் கொள்கின்றன. இப்படிப் பரிசுகள் அறிவிக்



கப்படுவதால் அவற்றைப் பெறும் இலக்கை நோக்கி ஆட்டக்காரர்கள் செயல்படும் அபாயம் இருக்கிறதல்லவா?

ஸ்ரீகாந்த்: பரிசு பெற வேண்டும் என்ற இலக்கை நோக்கி ஆடுவதில் என்ன தப்பு இருக்கிறது? ஒருவர் தனிப்பட்ட முறையில் பரிசு பெறுவதற்காகச் சிறப்பாக ஆடினால் அதனால் அவருடைய அணியின் மொத்த செயல்பாடு மேம்படத்தானே செய்கிறது– வெற்றி வாய்ப்பு அதிகரிக்கிறது, பெருமை சேர்க்கிறது.

கல்கி: பணத்தையும் பரிசையும் இலக்காகக் கொண்டு ஆடினால் அது விளையாட்டு ஆகுமா?

ஸ்ரீகாந்த்: இன்றைக்குக் கிரிக்கெட் அரங்கில் பணம் மிக முக்கியமான இடம் வகிக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை. இருக்கும் காலத்தில் முடிந்த அளவு பணம் பண்ணிவிட வேண்டும் என்று



ஒவ்வொரு ஆட்டக்காரரும் நினைக்கிறார். இதில் எந்தத் தப்பும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால் அந்தப் பணம் ஒன்றும் சும்மா கிடைத்துவிடுவதில்லை. உடலையும் மூளையையும் வருத்திப் பெறப்படும் பணம்தான் அது. கிரிக்கெட்டுக்காகச் சொந்த வாழ்க்கையில் எவ்வளவோ தியாகங்கள் செய்கிறோம். வருடத்தில் பாதி நாட்கள் குடும்பத்துடன் இருப்பதில்லை. என் மகன் பிறந்த போது நான் ஊரில் இல்லை. அவனுடைய முதல் பிறந்தநாள் கொண்டாட்டத்தில் நான் கலந்து கொள்ள முடியவில்லை. பல சமயங்களில் இந்தியாவில் இருந்து கொண்டே மாதக் கணக்கில் என் மனைவியைப் பார்க்க முடியாமல் போகும்.

கல்கி: இது நீங்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்ட வாழ்க்கை முறைதானே? இந்தத் தியாகங்களையும் கஷ்டங்களையும் ஏன் அனுபவிக்க வேண்டும்?

ஸ்ரீகாந்த்: அதிலிருந்து கிடைக்கும் சமூக அந்தஸ்துக்காகவும் சாதனை உணர்வுக்காகவும்தான். அடிப்படையாக ஓரளவு திறமை இல்லாதவர்கள் உலகக் கிரிக்கெட் அரங்குக்குள் நுழைய முடியாது. அந்தத் திறமைக்கு அங்கீகாரம் கிடைக்கும்போது யார்தான் அதை ஏற்க மாட்டார்கள்? நாற்பதாவது வயதில் 'நாமும் வாழ்க்கையில் ஏதையோ சாதித்திருக்கிறோம்' என்ற திருப்தியோடு காலை நீட்டி உட்காரலாம்.

கல்கி: விளையாடுபவனுக்குப் பணமும் சாதனை உணர்வும்தான் முக்கியம் என்றால் விளையாட்டின் ஜீவனே நொடித்துப் போய் விடாதா? நமது வெற்றியைக் காட்டிலும் எதிர் அணியின் தோல்வி முக்கியமாகி killer instinct உடன் ஆடுவதால் ஆக்க பூர்வமான அணுகுமுறை அழிந்து போகாதா?

ஸ்ரீகாந்த்: நான் சொல்வதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். மைதானத்துக்குள் நுழையும்போது பார்வையாளர்களுக்கு ஒரு சிறந்த ஆட்டத்தைக் கண்டு களித்த திருப்தியை அளிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் நான் போகிறேன். அந்தத்திருப்தி எப்படிக்கிடைக்கிறது? விளையாட்டின் சுவை கூடுவதால்தான். சுவை கூட வேண்டுமானால் போராட்டம் இருக்கத்தான் வேண்டும். நமது வெற்றிக்காக ஆடினால் அது எதிர் அணியின் தோல்விக்காக ஆடுவதாகத்தான் இருக்க முடியும். Draw வுக்காக ஆடுவது என்பதுதான் நீங்கள் சொல்வது போல் விளையாட்டின் ஜீவனை ஒடுக்கும்.

மேலும் கிரிக்கெட்டில் நிறைய பணம்



இருக்கிறது என்று பலர் நினைக்கிறார்கள். பணம் இருப்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் பிறர் நினைக்கும் அளவிற்கு இல்லை. அப்படி வரும் பணம் நிரந்தரமான வருவாயும் இல்லை. தொடர்ந்து சிறப்பாக ஆடினால் தான் ஏதோ சில லட்சங்கள் பணம் பண்ண வாய்ப்பு இருக்கிறது... சரியாக ஆடாவிட்டால் அதோடு உங்கள் அத்தியாயமே முடிந்து போகிறது.

*கல்கி:* சில லட்சங்கள் என்பது எந்த அளவுகோல்படி பார்த்தாலும் நம் நாட்டு நிலைமைக்கு மிகப் பெரிய தொகை இல்லையா?

*ஸ்ரீகாந்த்:* எவ்வளவோ தொழிலதிபர்கள் அதைக் காட்டிலும் அதிகமான தொகையை இன்னும் குறைந்த நேரத்தில் பண்ணிவிடுகிறார்கள்.

*கல்கி:* தொழிலதிபர்களை விட்டுத் தள்ளுங்கள். ஒரு சராசரி இந்தியனின் வருமானத்தோடு ஒப்பிடும்போது நீங்கள் சம்பாதிக்கும் பணம் மிக அதிகம்தானே?

*ஸ்ரீகாந்த்:* இருக்கலாம். ஆனால் பிறர் நினைக்கும் அளவிற்கு அவ்வளவு அதிகம் இல்லை என்றுதான் சொல்கிறேன்.

*கல்கி:* அதிகம், குறைவு என்பதெல்லாம் அவரவர் மனநிலையைப் பொறுத்த விஷயமில்லையா?

*ஸ்ரீகாந்த்:* இருக்கலாம்.

*கல்கி:* நீங்கள் இன்னொன்றையும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். கிரிக்கெட்டில் கிடைக்கும் பணம் பெரும்பாலான ஆட்டக்காரர்களுக்கும் பாக்கெட் மணி தான். ஒரு நல்ல கிரிக்கெட் ஆட்டக்காரருக்கு ஆயிரக்கணக்கான ரூபாய் சம்பளத்தில் வேலை தந்து அவர் அனேக நாட்களில் அலுவலகத்திற்குச் சரியாக வராததையும் பொருட்படுத்தாமல் அவரைப் போஷிக்க நிறுவனங்கள் இருக்கின்றன.

*ஸ்ரீகாந்த்:* அப்படிப் போஷிக்காவிட்டால் நம் நாட்டில் கிரிக்கெட் செத்துவிடும். நான் பணியாற்றும் டி. வி. எஸ். நிறுவன அதிபர் ரத்தினமும் அவர் மகன் ஸ்ரீநாத் ரத்தினமும் என் நலனில் மிகவும் அக்கறை காட்டுவார்கள். ஸ்ரீநாத்துக்குக் கிரிக்கெட் தெரியும் ஆதலால் என் விளையாட்டை விமர்சித்து, நிறையப் பேசுவார். அதற்காக நான் அலுவலகம் போகாமலே இருந்துவிட முடியாது. போய் வேலை செய்ய வேண்டும். மாலை மூன்று மணிக்குப் பயிற்சிக்குப் போகவும் அடிக்கடி வெளியூர் போகவும் அனுமதி போன்ற சில சலுகைகள் தரப்படும்.

*கல்கி:* நீங்கள் சந்தித்துள்ள கிரிக்கெட் ஆட்டக்காரர்களுள் நினைவில் நீங்காதவர் யார்?

*ஸ்ரீகாந்த்:* ஜி. ஆர். விச்வநாத். அவரைத் தான் சிறு வயது முதலே 'ஹீரோ'வாக எண்ணிப் போற்றி வந்தேன். அவரை நேரில் பார்த்த போது அந்த எளிமையும் தன்னடக்கமும் என்னை அசத்திவிட்டன.

கல்கி: உங்களுடைய மிகச் சிறந்த ஆட்டமாக எந்த இன்னிங்ஸைக் கருதுவீர்கள்?

ஸ்ரீகாந்த்: டெஸ்டுகளில் ஸிட்னியில் அடித்த செஞ்சுரியையும் ஒருநாள் ஆட்டத்தில் சமீபத்தில் ஜெய்ப்பூரில் அடித்த செஞ்சுரியையும் உலகக் கிரிக்கெட் சாம்பியன்ஷிப்பில் இங்கிலாந்துக்கு எதிராக அடித்த 57 ரன்களையும் குறிப்பிடுவேன்.

கல்கி: எந்த பௌலரை எதிர்த்து ஆட மிகவும் சிரமப்பட்டீர்கள்; யார் பௌலிங்கை மிக எளிதாகச் சந்தித்தீர்கள்?

ஸ்ரீகாந்த்: 'ஃபார்ம்' இல் இருந்தால், எந்த பௌலரையும் எளிதாகச் சந்திக்க முடியும் என்ற தன்னம்பிக்கையும் தைரியமும் இருக்கும். அப்படி இல்லாவிட்டால் நீங்களே வந்து பௌல் செய்தால் கூட அவுட் ஆகிவிடுவேன்!

கல்கி: ஃபார்மில் இருப்பது என்றால் என்ன?

ஸ்ரீகாந்த்: அதை எப்படி விளக்குவது என்று தெரியவில்லை... ஒருவர் ஆடும் போது தான் கண்டுபிடிக்க முடியும். டென்னிஸ் இல் இதை மிகச் சுலபமாகக் கண்டுபிடிக்க முடிகிறது. மெக்கன்ரோ 'ஃபார்ம்' இல் இல்லாத போது ஆட முடியாமல் கஷ்டப்பட்டது எல்லோருக்கும் தெரிந்தது.

கல்கி: செயற்கை ஒளியில் (flood-lit) மாட்சுகள் விளையாடுவது கடினமாக உள்ளதா?

ஸ்ரீகாந்த்: அஸ்தமன சமயத்தில் சுமார் அரை மணி நேரத்திற்கு பாட்டிங் சிறிது கஷ்டமாக இருக்கும். மற்றபடி பெரிதாகப் பிரச்னை இராது.

கல்கி: நம் நாட்டில் கிரிக்கெட் மற்ற எல்லா ஆட்டங்களையும் விடப் பிரபலமாக இருக்க என்ன காரணம்?

ஸ்ரீகாந்த்: மக்கள் ஆதரவு அதற்கு இருப்பதால்தான்.

கல்கி: அரசும் சரி, தனியார் நிறுவனங்களும் சரி, கிரிக்கெட்டைத்தானே அதிக அளவில் ஆதரிக்கின்றன.

ஸ்ரீகாந்த்: மக்கள் அதை விரும்புவதால் தான் ஆதரிக்கின்றன. நீங்களே ஏன் ஸ்ரீகாந்தைப் பேட்டி காண வர வேண்டும்? ஒரு கபாடி விளையாட்டு வீரர் படத்தை மேலட்டையில் போட்டுப் பேட்டி காண்பதுதானே! மக்கள் ஆதரவு எதற்கு இருக்கிறதோ அதற்குப் பிராபல்யம் அதிகம். பிரபலமாக இருப்பதால் மக்கள் ஆதரவும் அதிகரிக்கிறது. இது ஒரு விடுபட முடியாத வட்டம்.

கல்கி: பெண்கள் கிரிக்கெட் ஏன் பிரபலமடையவில்லை?

ஸ்ரீகாந்த்: ஏனென்றால் அதில் சுவை இல்லை. கிரிக்கெட் பெண்களுக்கான ஆட்டமே இல்லை. ஒரு பெண்ணால் 85 — 90 எம்.பி.எச். வேகத்தில் பந்து வீச முடியுமா?

கல்கி: போகப் போக அந்தத் திறமை வராமலா போய்விடும்?




படிக்காமல் இருந்திருந்தால்
பலகாரம் விற்றேனும்
பணம் காசு
பார்த்திருப்பேன்
வேலையற்றுப் போய்ப்
படித்ததனால்
வேலை தேடுவதே
எனக்கு
வேலையாய்ப் போயிற்று

— ப. விஜயபாலன்

ஸ்ரீகாந்த்: அப்போது ஆண்கள் அதை விட வேகமாகப் பந்து வீசிக் கொண்டிருப்பார்கள்!

கல்கி: ஒரு மாட்சில் வெற்றி பெற்றால் குழுவின் காப்டன் ஏகமாகப் புகழப்படுகிறார்; தோற்றாலோ அவர் மீது ஒட்டு மொத்தமாகப் பழி சுமத்தி விடுகிறார்கள் — இது நியாயமா?

ஸ்ரீகாந்த்: ரொம்ப அநியாயம். என்னைக் கேட்டால் ஓரளவு கிரிக்கெட் தெரிந்தவர் யாருமே இன்னின்ன இடங்களில் ஃபீல்டர்களை நிறுத்த வேண்டும் என்று தீர்மானித்துச் செயல்படலாம். பௌலரை மாற்றுவதால் விக்கெட் விழுவதும் விழாமல் போவதும் பெரும்பாலும் அதிர்ஷ்டத்தைப் பொறுத்த விஷயம். மேலும் ஒரு காப்டன் இப்படி இப்படி விளையாடு அல்லது பந்து வீசு என்று சொல்லத்தான் முடியும். அதை ஒவ்வொரு ஆட்டக்காரரும் உயிரைக் கொடுத்துச் செய்தால்தானே பலன் கிடைக்கும். எனவே தோல்விக்குக் காப்டனே காரணம் என்று பழி சுமத்துவதிலோ வெற்றி பெற்றால் ஒரேயடியாகக் காப்டனைப் புகழ்வதிலோ எனக்கு ஒப்புதல் கிடையாது.

கல்கி: நீங்கள் பதினேழு டெஸ்ட் மாட்சுகளில் ஆடி 871 ரன்கள் எடுத்திருக்கிறீர்கள். பாட்டிங் ஆவரேஜ் 31.1 தான். இதற்குக் காரணம் உங்கள் துரதிர்ஷ்டம் என்பீர்களா? நீங்கள் பல முறை தொண்ணூறுகளில் அவுட் ஆகியிருக்கிறீர்களே?

ஸ்ரீகாந்த்: துரதிர்ஷ்டம் என்ன துரதிர்ஷ்டம்! எல்லாம் என் திமிரும் அவசரக் குடுக்கைத்தனமும்தான் காரணம்!

பேட்டி: **எமது நிருபர்கள்**

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**

புகைப்படங்கள்: **ஏ. எஸ். திவாகர்**

# பெண்கள் வேலைக்குப் போவதால்...

வாசகர் தீர்ப்பு:

| | |
|---|---|
| சமுதாயப் பிரச்னைகள் அதிகரித்துள்ளன | 69% |
| சமுதாயப் பிரச்னைகள் குறைந்துள்ளன : | 31% |

சமுதாயப் பிரச்னைகள் அதிகரித்துள்ளன :

முதல் பரிசு வாதம்








* வேலைக்குச் செல்லும் பெண்ணின் குழந்தை ஆயாவின் அசட்டையில் வளர்ந்து, அம்மாவின் அன்புக்கு ஏங்கி, பின்னாளில் அம்மாவைக் கூட மதிக்காதவனாய் உருவாகிறான்.

* மனைவி சம்பாதிப்பதால் பல ஆண்கள் குடும்பப் பொறுப்பற்றுச் சோம்பேறிகளாகி விடுகின்றனர். மனைவி, தன்னை விட அதிகமாகச் சம்பாதித்தாலோ '(Inferiority Complex)' வேறு. இதனால் குடும்ப அமைதி கெடுகிறது.

* ஒரு பெண்ணுக்குக் கிடைக்கும் வேலையே ஓர் ஆணுக்குக் கிடைத்தால் ஒரு குடும்பமே வாழும். கணவனும், மனைவியும் சம்பாதிக்கும் குடும்பத்துக்கு அவ்வேலையே ஒரு பொழுதுபோக்குத்தான்.

* பெண்களுக்கு விடுமுறைகள் அதிகம் தர வேண்டியிருப்பதால் வேலைத் திறன் குறைகிறது.

* வேலைக்குப் போகும் பெண் அதிக வரதட்சணை தந்து மணம் புரியத் தயாராக இருக்கிறாள். இது வரதட்சணை வளர ஒரு காரணமாகிறது.

* வேலைக்குப் போகும் தன் பெண்ணின் வருமானத்தை இழக்க மனமின்றி அவள் திருமணத்தைப் பற்றியே கண்டு கொள்ளாமலிருக்கும் பெற்றோர்களும் உண்டு என்பது அதிர்ச்சி தரும் உண்மை!

* பெண்களின் கவர்ச்சிக்கு முதலிடம் தந்து திறமையை மதிக்காததால் பல வேலை வாய்ப்புக்களை ஆண்கள், தகுதியிருந்தும் இழந்து விடுகிறார்கள்.

* பல இளைஞர்கள் வேலை கிடைக்காததால் மனவிரக்தியடைந்து பல தீய பழக்கங்களுக்குத் தங்களைப் பலி கொடுக்கிறார்கள்.

* கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் செல்வதால் வேலையில் முன்னேற வேண்டுமே என்ற அக்கறை இருவருக்கும் இன்றி, ஒருவித மெத்தனமே மிஞ்சுகிறது.

* எக்கச்சக்க விலை கொடுத்துப் பொருட்களை வாங்கிக் கொள்கிறார்கள் கணவன், மனைவி வேலை செய்யும் குடும்பத்தார் — இதனால் விலைவாசி பயங்கரமாய் உயருகிறது.

* வேலைக்கும் போய் வீட்டையும் கவனித்து, குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் பெண் வயதான காலத்தில் உடல், மனநலம் கெட்டுத் துன்புறுகிறாள்.

* எந்தத் தலைவரின் சுயசரிதையைப் படித்தாலும், "என் தாய்தான் எனக்கு ஊக்கம் அளித்தவள்" என்ற வரி நிச்சயம் இருக்கும். அப்படி ஊக்கமளிக்கக்கூடிய தாயே அடித்துப் பிடித்து (சமயத்தில் தன் குழந்தைகளிடமும் வேலை வாங்கிக் கொண்டு) வேலைக்கு ஓடும் போது குழந்தைகளுக்கு ஊக்கம் அளிப்பது

எப்படி? வருங்காலத் தலைவர்களை உருவாக்குவதுதான் எப்படி?

— உ மார்த்தி. கோவை — 43.

1. திருமணத்திற்கு முன் வேலைக்குப் போகும் பெண்கள்,
2. திருமணத்திற்குப் பின் வேலைக்குப் போகும் பெண்கள்,
3. வேறு வழியின்றி தனக்கென்று பொருளீட்ட வேண்டுமென்ற நிர்ப்பந்த நிலையில் வேலைக்குப் போகும் பெண்கள்.

இம்மூன்று வகை நிலையில் பிரச்னைகள் குடும்பத்தில் அதிகரிப்பது திருமணமான பெண்கள் வேலைக்குப் போவதால்தான்.

— திருமதி கே. சாந்தா வெங்கடேசன், திருச்சி — 13.

வேலைக்குப் போகும் பெண்களில் 90 சதவீகிதம் அதிகப்படி சௌகரியத்துக்காகவோ அல்லது கட்டாயத்தின் பேரிலோ தான் வேலைக்குப் போகிறார்கள். அநேகம்




பெண்கள் கணவரின் கட்டாயத்திலேயே வேலைக்குப் போகிறார்கள் என்பது உண்மை. தற்சமயம் கல்யாண மார்க்கெட்டிலும் பெண் 'வேலைக்குச் செல்கிறாள்' என்பது ஒரு + பாயிண்ட். அவசியமிருந்து வேலைக்குப் போகும் பெண்கள் தவிர கணவன் நல்ல சம்பாத்தியத்திலிருந்து வேலைக்குப் போகும் பெண்கள் ஒதுங்கியிருத்தலே நன்று.

— சியாமளா ராமசுவாமி, சென்னை — 4.

கணவன் ஓர் அலுவலகத்தில்,— மனைவி ஓர் அலுவலகத்தில்பணி முடிந்துவிட்டுதிரும்பச் சற்று நேரமானால் சந்தேகப் பார்வைகள் — கணவனுக்கு அடங்கிய மனைவியானாலும் தானும் சம்பாதிப்பதால் தட்டிக் கேட்கின்ற பொழுது எற்படும் சமஉரிமையை நிலை நாட்டுகின்ற போர்க் குரல்கள் — அது தொடர்பாக எழும் பல சிக்கலான பிரச்னைகள், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் அடிப்படை வாழ்க்கைப் பண்பே இதில் சிதறடிக்கப்படுகிறது.

— அ. இராசரத்தினம், திருச்சி — 1.

விலைவாசி எற்றம், மட்டுமின்றி ஆடம்பரங்களைப் பெருக்கிக் கொள்வதற்காகவும் பெண்கள் வேலைக்குப் போகிறார்கள். மனைவியாய், தாயாய் இருந்து நிறைவேற்றக் கூடிய கடமைகளோடு அலுவலக வேலைகளும் பிரச்னைகளும் சேர்ந்து விடுகின்றன. விளைவு குடும்ப அமைதி பலியாகி விடுகிறது. பெண்கள் எப்பொழுதும் பதற்றத்திலேயே இருக்கிறார்கள். சிறு விஷயங்களுக்குக் கூட எரிச்சல் படுகிறார்கள். குழந்தைகளின் நிலையைப் பார்த்தால் மிகவும் பரிதாபம்! பெண் வேலைக்குச் செல்கையிலும், தனிப்பட்ட முறையில் பல மனிதவக்கிரங்களைச் சந்தித்து, அவற்றிலிருந்து தப்பித்துக் கத்தி முனையின் மேல் நடப்பது போல் நடந்து வருகிறாள்!

— வி. காயத்ரி, திருச்சி — 2.

பெண்கள் வேலைக்குப் போக அவசியமில்லை என்று கூறுவது பிற்போக்காகத் தோன்றுமேயாகில் இதோ நான் தருகிற முற்போக்குச் சிந்தனைச் சிற்பி டால்ஸ்டாயின் கருத்துக்களைப் படியுங்கள்.

"பெண் டாக்டர்கள், பெண் குமாஸ்தாக்கள், பெண் வக்கீல்கள், பெண் விஞ்ஞானிகள், பெண் எழுத்தாளர்கள் இல்லாமல் நம்மால் வாழ முடியும்.

ஆனால், தாய்மார்கள் இல்லாமல், சகோதரிகள் இல்லாமல், சிநேகிதிகள் இல்லாமல், அதாவது ஆண்களிடத்திலுள்ள உயர்வையே கண்ணெனக் கொண்டு அன்பு செலுத்தி, நாம் அறியாதவாறு ஒவ்வொரு விநாடியும் ஆக்குவித்து, ஊக்குவித்து நம்மைக் காப்பாற்றும் அவர்கள் இல்லாமல் போனால் வாழ்வு துக்கமாகி விடும்.

— திருமலை கோவிந்தன், மதுரை — 1.




"பணமுள்ளவர்கள் சில்லறை இருக்கா என்றும் இல்லாதவர்கள் அரைக்க அரிசி இருக்கா என்றும் விசாரித்துக் கொண்டு சாப்பிடவும்!" — உரிமையாளர்

— கதிர்வேல்

## சமுதாயப் பிரச்னைகள் குறைந்துள்ளன

## முதல் பரிசு வாதம்

பெண்கள் வேலைக்குப் போவதால் சமூகப் பிரச்னைகள் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் போது, அதிகரித்திருப்பதாகத் தோன்றும். ஆனால் உண்மையில் பிரச்னைகள் குறைந்துள்ளன.

எப்படி?

அவள் வேலைக்குப் போவதால் வருவாய் பெருகுகிறது. பணத் தட்டுப்பாடு சமாளிக்கப்படுகிறது. அதனால் குழந்தைகளுக்கு நல்ல படிப்பும், சத்தான ஆகாரமும், சுத்தமான உடையும் அளிக்க முடியும். சமுதாயத்தில் ஒரு கௌரவம் ஏற்படுகிறது. சேமிப்பு கூடுகிறது. பணத்தின் மதிப்பு பெண்ணுக்கும் தெரிகிறது. வீடோ, நகையோ, அவரவர் வருமானத்தை ஒட்டி வாங்க ஏதுவாகிறது.

சமையல் போக மீதி நேரத்தில் ஏற்படும் வெட்டிப் பேச்சும், வீண் சண்டைகளும் இதனால் தடைப்படுகின்றன. கணவனை ஆபீஸ் அனுப்பியதும் தியேட்டருக்கு 'ஓடும்' கொடுமை தவிர்க்கப்படுகிறது.

பிள்ளைகளை யார் கவனிப்பது? வீட்டு வேலைகளை யார் சுமப்பது? நியாயமான கேள்வி!

பிள்ளைகளைக் கவனிப்பது முழுநேர வேலையா என்ன? ஆண்களும் அதில் உதவுகிறார்கள் என்பது நடைமுறை உண்மை. வீட்டு வேலைகள்? ப்பூச்! எத்தனை பெண்கள் எல்லா வீட்டு வேலைகளையும் இழுத்துப் போட்டுச் செய்கிறார்கள்?

ஆயா, இல்லையென்றால் அகம் உடையான், மீறினால் பிள்ளைகள்!

எல்லாவற்றையும் விட முக்கியமானது, கணவன் அவளை மிதிக்க முடியாது. மதிக்கிறான்! ஒருவேளை மிதித்தால்? நம்பிக்கையுடன் வாழ்வைச் சாதிக்கிறாள்!

— பொடுசி, சென்னை — 84.

விண்ணோக்கியே செல்லும் விலைவாசி உள்ள இக்கால கட்டத்தில் எந்த ஒரு குடும்பமும் பல்துறை வருமானமின்றி மிகச் சாதாரணத் தேவைகளைப் பெற்று மனத்திருப்தியுடன் வாழ முடியாது என்பது வெள்ளிடைமலை. எனவே பெண்கள் வேலைக்குப் போவது என்பது கட்டாயம் என்ற சூழ்நிலையில் தள்ளப்பட்டுள்ளோம்.

— என். சுந்தரராஜன், அருப்புக்கோட்டை.

நண்பர் வீட்டுமனை வாங்கி, அலுவலகம் கொடுக்கும் கடனில் வீடும் கட்டினார். இத்தகைய நிலையில் ஒருநாள் நண்பர் ஸ்கூட்டரில் சென்றபோது, விபத்துக்குள்ளாகி, ஸ்தலத்திலேயே மரணம் அடைய நேரிட்டது. அது அந்தக் குடும்பத்திற்குப் பெரும் பாதிப்புதான் என்றாலும் மனைவி வேலை பார்த்து வந்ததால், பெரும் நொடிப்பிலிருந்து அந்தக் குடும்பம் தப்ப முடிந்தது. மேலும், தங்களுடைய குழந்தைகளின் எதிர்காலத்திற்கு, அந்தப் பெண்மணி யாரையும் நம்பி இருக்க வேண்டியிராமல் தானே சுயமாகத் தன் சம்பாத்தியத்தில் குழந்தைகளுடன், சொந்த வீட்டில் சௌகரியமாக வசிக்க முடிகிறது.

— திருமதி ராஜேஸ்வரி, திருச்சி — 18.

தவறான, முறைகேடான பழக்க வழக்கங்களுக்கு அடிமையாகி ஆண்கள் தங்கள் குடும்பத்தில் ஓர் இக்கட்டை ஏற்படுத்திவிடும் நிலையில்; அவற்றால் ஏற்படும் பின்விளைவுகளைச் சமாளிக்க ஒரு பெண் என்ன செய்ய முடியும்? குடும்ப அஸ்திவாரத்தைப் பலப்படுத்தும் முயற்சியாக அவள் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை என்ன? மனம் வருந்தி மூலையில் முடங்கிக் கிடப்பதால் ஏற்படும் பிரச்னைகளைவிட, பெண்கள் வேலைக்குப் போவதால் ஏற்படும் பிரச்னைகள் மிகமிகச் சாதாரணமானவைதாம்..

— திருமதி எல். வத்சலா, கும்பகோணம்.

பெண்கள் வேலைக்குப் போவதால், தாழ்வு மனப்பான்மை விலகி, 'நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, யாருக்கும் அஞ்சா நெஞ்சம்' கொண்டவர்களாய், பாரதி சொன்ன புதுமைப் பெண்களாக நூற்றுக்கு நூறு ஆகாவிட்டாலும் ஓரளவுக்கு மாறி வருகிறார்கள். பெண்கள் வேலைக்குப் போவதால்தான் வேலை இல்லாத் திண்டாட்டம் உள்ளது என்பதை ஏற்றுக் கொள்ள இயலாது. ஜனத்தொகை பெருக்கமும் போதிய தொழில் வளர்ச்சி இல்லாமையும்தான் உண்மைக் காரணங்கள். மேலும் ஒரு பெண் வேலைக்குப் போனால் வீட்டு வேலைகளைச் செய்ய அமர்த்தப்படும் இன்னொரு நபருக்கும் வேலை கிடைக்கிறதே!

— அ. குளைசராஜ், வேலூர் — 1.

நம் நாட்டைப் பேயாக ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும் தலையாய பிரச்னையான வரதட்சிணையிலிருந்து ஓரளவாவது தப்பித்துக் கொள்ளலாம். வேலைக்குச் செல்வதன் மூலம் பெண் ஆணுக்குச் சமம் என்ற தன் உரிமையை நிலைநாட்டுகிறாள். சமுதாயத்தில் தானும் முக்கிய அங்கம் என்று அறிந்து கொள்கிறாள். திருமணமாகாத பெண்,வீட்டில் பாரம் என்ற வீண் பழியிலிருந்து தப்பித்து, வீட்டிற்குப் பொறுப்பாக இருக்கலாம்.

— கா. கலைச்செல்வன், பொள்ளாச்சி — 1.

**ஃபாரெக்ஸ்®**
**முதலான விருப்பம்!**

# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத்
தேவையில்லை!
நீருடன் கலக்கி
கொடுத்தாலே
போதும்.

**தாயன்பைக் கூறிடும்**
**தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

CLARION/B/GX/15/203

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




**23**

**மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்**

| | |
|---|---|
| புரதம் | ரிபோ |
| கொழுப்பு | ஃப்ளேவின் |
| கார்போ | நிகோடி |
| ஹைட்ரேட் | னமைடு |
| கால்ஷியம் | கால்ஷியம் |
| பாஸ்பரஸ் | பேன்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | பைரிடாக்ஸின் (பி6) |
| (உப்பு வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி1' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

384. GLC. 120 Tm

# கண்டனத்துக்குரியதை நியாயப்படுத்துகிறீரே!

* ஒரு மாநிலத்தை நிர்வாகம் செய்யும் தலைமைச் செயலக அதிகாரிகள் குண்டர்கள் போல் போலீஸார் மீது கல் வீசுவதும், முதலமைச்சரைத் தூக்குவோம் என்று அச்சுறுத்துவதும் மிகவும் கடுமையாகக் கண்டனம் செய்ய வேண்டிய செயல்கள். அதைவிடுத்து அச்செயல்களை நியாயப்படுத்தியது 'கல்கி' செய்த மாபெரும் தவறு.

விழுப்புரம். கே. எஸ். குமார்.

* கல்கி 17.8.86 இதழில் குறிப்பிட்டுள்ளது போல் கொடைக்கானலில் உள்ள கார்லாக் நிறுவனம் என்னாலும் எனது நண்பர்களாலும் நிறுவப்பட்டது அல்ல; எங்களால் நிர்வகிக்கப்படுவதுமல்ல. கார்லாக் ஒரு சமூக நல சங்கம். அதன் தலைவர் திருமதி டி ஜாங். நிர்வாகிகள் தொண்டர் அணியிலிருந்து ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இந்நிறுவனம் ஜாதி மத பேதமின்றி ஏழைகளுக்கு உதவுகிறது. மெர்ஸி ஹோம் என்ற விடுதியும் கார்லாக்குக்கு உட்பட்டே இயங்குகிறது.

கொடைக்கானல். வி. ஆர். ராஜகோபால்.

* கொடைக்கானலில் ரூ. 1.50 க்கு நான் ஏழைகளுக்கு வைத்தியம் பார்ப்பதாக எழுதப்பட்டுள்ளது. உண்மையில் இது கொடைக்கானலில் பாரதிய வித்யா பவன் நடத்தும் பல நற்பணிகளுள் ஒன்று. இதற்குப் பல நல்லிதயங்களின் நன்கொடைகளும் கிடைக்கின்றன. இது எனது தனிப்பட்ட சேவை அல்ல.

கொடைக்கானல். டாக்டர் பி. ராம்நாத்.

* குழப்பமான முடிவுகளை எடுப்பதில் தமிழக அண்ணாச்சிக்குத் தாம் ஒன்றும் சளைத்தவரல்ல என்பதை மீண்டும் நிரூபித்துவிட்டார் என். டி. ஆர்!

குடியாத்தம். ஆர். அரிகோபி.

* பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு இடஒதுக்கீடு என்னும் பெயரில் ஆந்திர அரசு உருவாக்கியுள்ள புதிய சிக்கலையும் அதனால் அவதியுறும் ஆந்திர மக்களின் அவல நிலையினையும் சுட்டிக் காட்டி, என். டி. ஆரின் அரசியல் மெத்தனத்திற்கு அருட்டம் கணித்த தலையங்கத்திற்குப் பாராட்டுக்கள்.

திருச்சி — 5. எம். காமராஜ்.

## வட்டமேஜை

* 'அழகிய பிச்சாவரத்தை அலங்கோலம் ஆக்காதீர்கள்' கட்டுரை உண்மையிலேயே யோசிக்க வைத்தது. அங்கு உள்ள நிலைமையை மிகவும் அழகாகச் சொன்ன கட்டுரை ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

சென்னை — 41. ஆர். ரூபா.

* அகதிகளின் பெயரால் ஏலம் எடுக்கப்பட்டு, பல இலட்ச ரூபாய்களை மோசடி செய்து வரும் கும்பல் ஒருபுறமும், மாட்டுக் கொட்டகைகளை விட மோசமான நிலையில் செயல்பட்டு வரும் மருந்தகம் ஒருபுறமும் எங்களது மாவட்டத்தின் நிகரற்ற வளர்ச்சிக்கு அருமையான முன்னோடிகளாகும்!

நெல்லிக்குப்பம். ஜெ. முகம்மது பாரூக்.

* அகதிகள் பெயரிலும் ஆதாயம் தூங்குவதற்கென்றே ஒரு மருந்தகம்!' இப்படியும் உண்டா என... முதலில் ஆச்சரியமடைந்தேன். பிறகு, வேதனைதான் மிஞ்சியது!

பள்ளிப்பாளையம். கே. ரஞ்சனிப்ரியன்.

* பதினைந்தாம் பக்கத்தில் கணவன் — மனைவி ஜோக், 32 ஆம் பக்கத்தில் வெளியாகியிருக்கும் ஜோக் இரண்டுமே முன்பே வேறொரு வார இதழில் வெளியாகி விட்டன!

கோப்பம்பட்டி. டி. ஜெயக்குமார்.

* 'தாய்ப் பாசம்' — யதார்த்தமாக, அழகாக, சிந்தித்து எழுதப்பட்ட சிறுகதை.

வந்தவாசி. ஆர். சங்கரன்.

* 'மலைவாசி மக்களுடன் ஒரு நாள்' செய்தியும் புகைப்படங்களும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு எங்களைக் கவர்ந்தன.

தக்கலை. 'இராமலிங்க'

* அற்புதம்! வெகு அற்புதம்! மலைவாசி மக்களுடன் ஒருநாள், கவர் ஸ்டோரி மூலம், அவர்களது வாழ்க்கை முறைகளைப் பலவிதமான புகைப்படங்களோடு வெளியிட்டு, அப்படியே தத்ரூபமாகக் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தி விட்டீர்கள்! இக்கட்டுரையைப் படித்து முடித்த போது, நாங்களும் மலைவாசிகளோடு ஒருநாள் பொழுதைக் கழித்ததைப் போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது.

காங்கயம். ஜி. பாரதி.

* அவங்க பேச்சு! அவங்க நடத்தை! அவங்க வாழ்க்கை!... எல்லாத்தையும் உள்ளபடியே எடுத்துச் சொன்ன 'மலைவாசி மக்களுடன் ஒருநாள்' வித்தியாசமான கட்டுரை!

சென்னை — 39. திருமதி நாராயணராவ்.

* போட்டிக்கதை — 'சேவை' சிறப்பாக இருந்தது. அதற்கு ஓவியர் வரைந்திருந்த படமோ அருமையிலும் அருமை.

பட்டிவீரன்பட்டி. கண்ணம்மா.

* தமிழ் சினிமாவின் தரம் உயரவே செய்யாது என 51 சதவீத வாசகர் தீர்ப்பு வழங்கியுள்ளதும் சினிமா மோகம் — ஏன் வெறி — அதிகம்தான் — அதுவும் 'தாய்க் குலம்' மத்தியில், என்பதைத் 'தாய்ப் பாசம்' சிறுகதை மெய்ப்பிக்கிறது.

தஞ்சை — 7. அ. சர்பத்.










நீதிமன்றப் பதவிகளையும், அரசாங்க வழக்குரைஞர் பதவிகளையும் நெடுங்காலமாகத் தமிழக அரசு காலியாக விட்டு வைத்திருப்பதை எதிர்த்து வழக்குரைஞர்கள் கிளர்ச்சி செய்யப் போகிறார்கள்!



# கல்கி

1986 செப்டம்பர் 28
மலர் 45 இதழ் 9
அக்ஷய புரட்டாசி 12



## அரசியல்வாதி—லஞ்ச ஊழலுக்கு வழிகாட்டி!

நாளொரு அலுவலகம்; பொழுதொரு வீடு என்று ரெய்டுகள் நடக்கின்றன. வரவேற்கிறோம். வருமான வரி அதிகாரிகளும், ஸி.பி.ஐ. நிபுணர்களும், கண்காணிப்பு (விஜிலன்ஸ்) துறையினரும் சுறுசுறுப்புடன் செயலாற்றுகிறார்கள். பாராட்டுகிறோம்.

நேற்று இவர்களை வாழ்த்தியிருக்க முடியாது; முணுமுணுத்துத்தான் இருக்க முடியும்! இன்று பலே சொல்கிறோம்! ஏன்? காரணம் இருக்கிறது. 37 ஆண்டுகள் காங்கிரஸ் ஆட்சியில் ஸோஷலிஸம் என்ற பெயரில் படிப்படியாக வரிச்சுமைகள் அதிகரித்தன; கண்ட்ரோல்கள் பெருகின; பர்மிட் லைசென்ஸ் ஆட்சி மக்களை மூச்சு முட்டித் திணறச் செய்தது. தொழிலதிபர்கள் — வியாபாரிகள் சிறகொடிந்த பறவைகளானார்கள். இந்நிலையில் வரி ஏய்ப்பும் கணக்கில் வராத கறுப்புப் பணம் உருவாவதும் அதிகரித்ததில் வியப்பில்லை. கறுப்புப் பணம் என்பது ஒரு தனி பொருளாதாரமாகவே தேசப் பொருளாதாரத்துடன் போட்டியிட்டு வென்று கொண்டும் வந்தது! பர்மிட் — லைசென்ஸ் — கண்ட்ரோல் ஆட்சியில் அரசு அதிகாரிகளுக்கு லஞ்சம் தருவதும் அவர்கள் பெறுவதும் ஓர் அன்றாட நிகழ்ச்சியாகவே, உண்பது, உறங்குவது போல் சர்வ சகஜமாகி விட்டது. இதற்காக மேலும் கறுப்புப்பணம் உற்பத்தியாயிற்று. சொல்லப் போனால் ஒருவர் சத்தியசந்தராக வாழ்வதென்பது கேலிக்குரியதாக ஆனது மட்டுமல்ல; காலப்போக்கில் ஒருவர் நேர்மையாக வாழ வேண்டுமென்றாலும் முடியாத காரியம் என்ற நிலை கூட ஏற்பட்டு வந்தது! இதே நேரத்தில் சில தொழிலதிபர்கள், வர்த்தகர்கள் மட்டும் ஏக போகங்களை அனுபவித்துக் கொழுத்துக் கொண்டிருந்தார்கள். பர்மிட் லைசென்ஸ் ஆட்சி அவர்களுக்கு வசதியாகவே இருந்தது!

ஆனால் இன்று நிலைமை படிப்படியாக மாறி வருகிறது. வரிகள் கணிசமாகப் பலப் பல இனங்களில் குறைக்கப்பட்டுள்ளன. பர்மிட் — லைசென்ஸ் முறை பல துறைகளில் நீக்கப்பட்டும் வருகின்றது. எனவே இனியும் வரி ஏய்ப்பு செய்து கறுப்புப் பணம் உருவாக்குவது மாபெரும் குற்றம்தான். இனிமேலும் அதிகாரிகளுக்கு லஞ்சம் தருவதும் அதிகாரிகள் அதைப் பெறுவதும் மன்னிக்கவே முடியாத அக்கிரமங்கள்தான்.

எனவே அமைச்சர் சிதம்பரம் அண்மையில் சென்னைக்கு வந்திருந்த போது, விஜிலன்ஸ், ஸி. பி. ஐ. துறையினரின் கூட்டத்தில், ''தைரியமாகச் செயல்படுங்கள்'' என்று கேட்டுக் கொண்டதை மனமாரப் பாராட்டுகிறோம். ''அரசு இலாக்காக்களிலும் அரசுத்துறை நிறுவனங்களிலும் குற்றம் புரியும் பெரிய அதிகாரிகளைப் பிடியுங்கள், சிறிய அதிகாரிகள், ஊழியர்கள் அச்சத்தால் தாங்களாகவே திருந்தி விடுவார்கள்'' என்று கூறியதையும் முழு மனத்துடன் வரவேற்கிறோம். ஆனால் கூடவே ஒரு சந்தேகமும் எழுகிறது:

டாக்டர்கள், வக்கீல்கள், தொழிலதிபர்கள், வியாபாரிகள் எல்லார் மீதும் வலை வீசுகிறீர்கள். சரி. அரசுத்துறை அதிகாரிகள், அரசு நிறுவன அதிகாரிகள் மீது படையெடுக்கிறீர்கள். நல்லது. ஏன், வருமான வரி அதிகாரிகள், சுங்க இலாகா அதிகாரிகள் மீது கூடப் பாய்கிறீர்கள்! சந்தோஷம். ஆனால்...

அரசியல்வாதி மீது மட்டும் உங்கள் கவனம் திரும்பாதது ஏன்? அவனிடம் கறுப்புப் பணம் இல்லையா? அவன் — பரம யோக்கியன் என்று நாங்கள் நம்ப வேண்டுமா? சிரிப்புத்தான் வருகிறது! லஞ்ச ஊழலுக்கு வழிகாட்டியே அவன்தானே!

தேர்தலுக்கு அவனுக்குப் பணம் வேண்டும். அதைக் கறுப்புப் பணமாகத் தொழிலதிபர் — வர்த்தகரிடம் பெற்று, பின்னர் அவர்களுக்குச் சலுகை காட்டுகிறான். இதற்காகவே கோடிக்கணக்கில் கறுப்புப் பணம் உருவாகிறது. இந்த விஷ வட்டம் உடையத் தேர்தல் முறை சீர்திருத்தப்பட வேண்டும். பிரதமரும் அவரது முழு நம்பிக்கையைப் பெற்றுள்ள சிதம்பரமும் இதுபற்றிச் சிந்திக்கட்டும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

*புலிப்பாலை உணர்ந்து.....



# எஸ்.டி.எஸ் கட்சி குண்டுராவ் கட்சி —ஒப்பிடுக!

நீங்கள் கேட்டவை — தராசு



எட்டாப்பழம்.....

* இனிய ராஜா, சென்னை—17

? எம்.ஜி. ஆரைத் தூற்றி எழுதும் பத்திரிகைக்கும் லாபம்; தூக்கி எழுதும் பத்திரிகைக்கும் லாபம். கல்கி எந்த ரகம்?

! கல்கி லாப நோக்குக்காக எதையும் எழுதுவதில்லை. எம்.ஜி. ஆரைத் தூற்றியது மில்லை. அவரது செயல்களை விமர்சிக்கும் போதும் தவறுகளைச் சுட்டிக்காட்டும் போதும் வாழ்த்தி எழுத வாய்ப்பு வாராதா என்ற ஏக்கத்தோடுதான் எழுதுகிறோம்.

* மனோபாரதி, பாண்டிச்சேரி

? ஒவ்வொரு தமிழனுக்கும் வேற்று மொழி தெரிந்து கொள்வதில் ஏன் நாட்டம் செல்லவில்லை?

! தன்னுடைய வாழ்க்கைக்கு அவசியம், இன்றியமையாதது என்று தெரியும்போது எந்த மொழியையும் யாருமே கற்றுக்கொள்ளாமல் இருக்க மாட்டார்கள். தமிழனும் விதிவிலக்கல்ல. ஆனால் இந்திய மொழிகளில் ஒரு மொழிக்கு மட்டும் ஆட்சி மொழி, பொது மொழி, தேசிய மொழி, பெரும்பான்மை மொழி என்றெல்லாம் தனி அந்தஸ்து தரப்பட்டு அம்மொழி பேசுவோருக்கு ஒரு மேலாதிக்க மனப்பான்மை வளர இடம் ஏற்படும்போது தமிழன் அதை எதிர்க்காமல் விடவும் மாட்டான்.

* நெ.2 யார்? * ஆட்டத்தில் அரசியல்



* எம். இராஜேந்திரன், லால்குடி

? ஸ்ரீநகர் ஒருநாள் கிரிக்கெட்டில் இந்தியா தோற்றதற்குக் காரணம் பிட்ச்தான் என்று கபில்தேவ் கூறியுள்ளாரே?

! அதில் உண்மை ஓரளவு இருக்கலாம். எந்த நாட்டில் கிரிக்கெட் ஆடப்படுகிறதோ அந்த நாட்டு அணிக்குச் சாதகமான விதத்தில் பிட்ச் தயாரிப்பது ஒப்புக் கொள்ளப் பட்ட விஷயம். ஆனால், 'இந்தியா தோற்க வேண்டும் என்று விரும்பினீரா?' என்று பிட்ச் தயாரித்த அன்பரைக் கேட்டு கபில்தேவ் அரசியலை ஆட்டத்தில் புகுத்தியது அநாகரிகம்.

* ஆமை வேகம் * பாக்கியசாலி!



* வி. முரளி, சென்னை—15 *

? அரசாங்க ஃபைல்கள் ஆமை வேகத்தில் நகர்வதாக நெடுஞ்செழியன் கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?

! எதிர்க்கட்சிகள் கூறி வந்த இதே குற்றச்சாட்டுக்களை மறுத்துப் பேசிய அமைச்சர்கள் புனுகுண்ணிகள் என்று உணர்த்துகிறது.

*** வாகதேவன், கல்கத்தா**

**? நாடி ஜோசியம் பார்த்ததுண்டா?**

! ஜோசியரையே நாடுவதில்லை.

*** ஆர். அப்துல் சலாம், திருச்சி**

**? 'எனது வாரிசாக யாரையும் அறிவிக்க மாட்டேன்' என்று அமெரிக்காவில் எம்.ஜி. ஆர். அறிவித்துள்ளாரே?**

! அமெரிக்காவில் மட்டுமென்ன, இங்கேயும்தான் மதுரை மாநாட்டின்போது சொன்னார். இவருக்குப் பிறகு கட்சித் தலைவர் யார்? ஆட்சி முதல்வர் யார்? என்று இவர் அறிவிக்கத் தேவையில்லை. அது ஜனநாயக மரபுகளுக்குட்பட்டுத் தீர்மானமாக வேண்டியவை. ஆனால் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும்போதே அமைச்சரவையில் நெ. 2 யார் என்பதை நிர்ணயிக்க வேண்டியது மிகவும் அவசியம். இல்லையெனில் உடல்நலக் குறைவினாலோ அல்லது வெளிநாடுகளுக்குச் செல்லும்போதோ ஒரே குழப்பம்தான் நிலவும்; தேக்க நிலையும் உருவாகும்.

*** டி. தாழை பிரபு, குடியாத்தம்**

**? விமானப் பயணிகளைக் காக்கத் தன் உயிரைத் தியாகம் செய்த நீர்ஜா பற்றித் தங்கள் கருத்து?**

! நான் மட்டுமென்ன, நாடே பெருமைப்படுகிறது!

*** கமலஹாசப்பிரியன், காரிமங்கலம்**

**? அரசியலை ஏன் சாக்கடைக்கு ஒப்பிடுகிறார்கள்?**

! சாக்கடை சண்டைக்கு வராது என்ற தைரியத்தில்தான்!

*** ஜெ. முகமது பாரூக், நெல்லிக்குப்பம்**

**? எஸ்.டி.எஸ். கட்சி, குண்டு ராவ் கட்சி— ஒப்பிடுக.**

! கைக்கு எட்டவில்லை என்பதால் 'சீச்சி! இந்தப் பழம் புளிக்கும்' என்று கூறியவர் குண்டுராவ். கைக்கு எட்டி ருசித்துப் பார்த்து, 'சீச்சி, இந்தப் பழம் புளிக்கிறது' என்று கூறியவர் எஸ்.டி.எஸ்.

*** கே. எம். ஜான்முஹம்மது, இளையான்குடி**

**? உடலுக்குத்தான் அழிவு, உயிருக்கு இல்லை; அது பாவ புண்ணியத்துக்கு ஏற்ப இன்னொரு உடலுக்குள் புகுந்து விடும் என்கிறார்களே, அப்படியென்றால்....?**

! மரணத்துக்குப் பின் என்ன என்பது யாரும் அறியாத மர்மம். உடல் வேறு, உயிர் வேறு — உணர்கிறோம். மரணத்துக்குப் பின் உடல் மண்ணாகிறது. உயிர் என்னாகிறது?— திரும்பி வந்து கூறியவர் யாருமில்லை. எனவே பரம தைரியசாலிக்குக்கூட மனக் கலக்கம் சிறிதளவேனும் உண்டாகும் மரணம் பற்றிச் சிந்திக்கும்போது. இதைப் பயன்படுத்தி மக்களை நல்வழிப்படுத்த முயல்வதில் தவறென்ன? அவரவர் செய்த பாவ புண்ணியத்துக்கு ஏற்ப மறு பிறவியே இல்லாது இறைவனுடன் ஐக்கியமாகி ஆனந்த நிலையை அடையலாம்; அல்லது மறு ஜென்மத்தில் உயர்ந்த ஜீவனாகவோ அல்லது தாழ்ந்த விலங்கினமாகவோ விளங்கலாம் என்னும்போது வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொள்ள நினைப்பது மக்களுக்கு இயல்பு. பரம நாத்திகராக விளங்கிய சிலர் கூட மரணம் நெருங்குகையில் 'சங்கரா, சங்கரா' என்று கூறக் காரணம் இதுதான். வாழ்க்கையில் சத்தியத்தையும் நல்லொழுக்கத்தையும் கடைப்பிடித்தவர்கள் மரண பயத்தைவெல்லவும் இதே தத்துவம் உதவுகிறது.

*** மின்னல் பிரியன், மானாமதுரை**

**? புதுவையில் மின்னல் என்ற மாணவியின் பேச்சுச் சுதந்திரம் பறிக்கப்பட்டு இருக்கிறதே?**

! சென்னை பாரதி விழாவில் இந்தியை ஆதரித்துப் பேசிய கீதா மீனாட்சி என்ற சிறுமியைப் பேச அனுமதித்த விழா நிர்வாகிகளின் பெருந்தன்மை, தாய்மொழியில்தான் கல்வி பயில வேண்டும் என்று பேசிய சிறுமி மின்னலைத் தடுத்து நிறுத்தியவர்களுக்கு இல்லாமல் போனது வேதனைக்குரியதுதான்.

*** க. மு. ந. ராசன் கலாமணி, கோபி.**

**? ஹோட்டலில் சாப்பிடப் பிடிக்குமா?**

! ஓ, பிடிக்குமே..... பிறர் செலவில்!

*** என். சோமு, மதுரை**

**? கல்கி டி. ராஜேந்திரனுக்கும் சினிமா T. ராஜேந்தருக்கும் என்ன வேறுபாடு?**

! உங்களுடைய சாதனையான இரு நூறு கேள்விகளைப் படிக்க வேண்டிய துர்ப்பாக்கியம் சினிமா T. ராஜேந்தருக்குக் கிடையாது.

*** ரூ 10 பரிசு பெறுபவர்:**
**வி. முரளி,**
**34, மசூதி தெரு,**
**சென்னை— 15.**




# பிலிப்ஸ்

## சென்ற ஆண்டு பிலிப்ஸ் வழங்கிய "முற்றிலும் புதியதை" விட வேறு சிறந்தது உண்டா?



இந்த ஆண்டின்
மிக நவீனமானதை
வழங்குவதும் பிலிப்ஸ்

மோனோ டூ-இன்-ஒன்கள் மற்றும் கேஸட் ரெக்கார்டர்களின்
அணிவரிசையை காணுங்கள்


AR 153 ரூ. 1195/-*


AR 243 ரூ. 1300/-*


AR 343 ரூ. 1450/-*


AR 151 ரூ. 595/-*


AR 143 ரூ. 1025/-*


AM 144 ரூ. 570/-*
AM 354 ரூ. 875/-*
AM 254 ரூ. 750/-*


AM 155 ரூ. 795/-*

CLARION B.P. 202/203/R TAM

*எக்சைஸ் வரி உள்ளிட்டது. தல வரிகள் தனி. இந்த விலைகள் மாற்றத்திற்கு உட்பட்டவை. லைசென்ஸ் தேவை இல்லை.

**பிலிப்ஸ் – ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



# CHAIN GANG

செய்யாத ஒரு கொலைக்குப் பதினைந்து வருடச் சிறைத் தண்டனை பெற்று ஒரு சீர்திருத்தச் சிறைக்கு வரும் நாற்பது வயதுக் கதாநாயகனைப் பற்றிய கதை.

சிறையில் காவலுக்கு இருக்கும் போலீஸ்காரர்கள் வன்முறையைக் கையாள்வதில் மன்னர்கள். க்யூவில் நிற்கும் ஷகதி அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசுகிறான்... அந்த இடத்தில் முட்டிக்காலில் உதை. கல்நேர வேலையின் போது தயங்குகிறான். சாட்டையால் ஒரு சொடுக்கு... வார்டன் கைதிகளை வரிசையாக நிற்க வைத்துப் பேசும் காட்சியில் தோ ஆங்க்கே பாரா ஹாத். பல்லாண்டு வாழ்க டைப் கதை என்று முடிவு கட்டும் நேரத்தில் தடால் என்று ஒரு இருப்பம்.

அந்த வார்டன், வெளியில் விபசார விடுதி நடத்தும் ஒருவனுக்கு உறுதுணை. அந்த இருவரும்தான் உள்ளே இருக்க வேண்டியவர்கள் என்று கதை பாதை மாறுகிறது.

இந்த நிரபராதி அந்த விபசார விடுதி ஆசாமிக்கு எதிராக டாக்குமெண்ட்களை எல்லாம் சேகரித்துக் கொண்டு, தப்பித்துப் போலீஸ் தலைமையகத்திற்குச் செல்ல— ஆச்சரியம்:

அந்தப் போலீஸ் ஆசாமியும் இந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்! எனவே மறுபடி ஜெயில்! அடி, உதை! சிறையில் இருக்கும் அத்தனை கைதிகளும் அந்த வார்டனுக்கு எதிரிகளாக மாற — புரட்சி!

வன்முறைக் காட்சிகள் அதிகம்தான் என்றாலும், படம் தொடங்கிய சிறிது நேரத்தில் சாய்ந்து உட்கார்ந்தவர்களை நிமிர்த்தி உட்கார வைப்பதிலிருந்து படத்தின் விறுவிறு தன்மையை அறிந்து கொள்ளலாம்.

க்ளைமாக்ஸில் சடார், படார் என்று சாயும் மனித ஈசல்கள், பாதாளச் சாக்கடையில் வில்லனுக்கு ஏற்படும் முடிவு —ஜீரணிக்கக் கூடியவர்களால் ரசிக்கப்பட வேண்டியவை.

# பாரு பாரு பட்டணம் பாரு

மோகன் ஜோசியப் பைத்தியம். ஜமாய்த்திருக்கிறார். தங்கையைப் பற்றி அம்மாவிடம் பிரஸ்தாபிக்கும் போதுகூட, 'அவ என்னம்மா பண்ணுவா, விருச்சிக ராசிக்காரி, அதான் வெடுக் வெடுக்னு கொட்டறு' என்று வசனம் பேசுவதில் தொடங்கி எல்லாவற்றிலும் ஜோசியப் பைத்தியம் என்பதைப் படம் முழுக்க நிரூபித்திருக்கிறார்.

வெண்ணிற ஆடை மூர்த்தி ஜோசியர் சொன்ன கண்டத்திற்குப் பயந்து ஃபேனைச் சுற்றவிடாமல் (ஃபேன் மேலே விழுந்து விடுமே) படுத்துக் கொள்ளும் இடம் களுக். இந்த ஜோசியப் பைத்தியத்தைக் காதலிக்கும் ரஞ்சனி, அவளை அடைவதற்காக அப்பாவிடம் முறை விடுவதும், அந்த அப்பா விஜுசக்ரவர்த்தி கையில் விச்சரிவாளுடன் ஜோசியர் வீட்டுக்கு ஓடிப் போய் ஜாதகத்தை எழுதச் சொல்ல, அந்த ஜாதகம் ஒரு ஜோசியப் புத்தகத்தில் வெளியாக, அதைப் பார்த்து விட்டு ஊரில் இருக்கும் ஜோசியப் பைத்தியங்கள் எல்லாம் அந்த மஹோன்னத ஜாதகக் கன்னியை

# இரவுப் பூக்கள்

சிவப்பு விளக்குப் பகுதி. சிவப்பு ரத்தக் கொலை. சஸ்பென்ஸ்.

மேற்கண்ட மூன்று விஷயங்களையும் நிர்மானித்த டைரக்டருக்கு மொறுமொறுப்பான திரைக்கதை அமைப்பதிலும் கவனம் தேவை என்பதை யாராவது எடுத்துச் சொல்லியிருக்கலாம்.

ரெட் லைட் தலைவியாய், மகா பொருத்தமான நடிப்புடன் குட் ஓல்ட் பிரமீளா. சின்னச் சிணுங்கல், தயார் சிரிப்பு, கண்ணோர இகழ்ச்சி. அதுவும் சத்யராஜ் இன்ஸ்பெக்டராய் விசாரணை நடத்த வீடு தேடி வரும்போது, ''ஹலோ, நீங்க இப்ப வேலை லேர்ந்து சஸ்பெண்டட் தெரியுமா?'' என்று நக்கலாய்ச் சொல்லுமிடம் மகா ஜோர்.



ரவீந்தர் ஊமை, செவிடு. வலுக்கட்டாயமாய் ஏமாற்றி தொழிலுக்கு இழுத்து வரப்பட்ட ஜீவிதாவை மனமார நேசித்து, ஒரு ரகசிய ராத்திரியில் தாலியும் கட்டி (அதுவும் தொழில்கூடத்திலேயே!)அதேமுதல்ராத்திரியில் ஜீவிதா கொலை செய்யப்பட, சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் சிறைக்குப் போகும் வித்தியாசமான ரோல். போலீஸ் என்ன கேள்வி கேட்கிறது என்பதும் விளங்காமல், தன் நிலை சொல்லவும் வழியில்லாமல்.... அந்தப் பாத்திரத்தின் மீது அபாரமான பரிதாபத்தை உற்பத்தி செய்கிறார் என்றால், ரவீந்தரின் நடிப்பு அத்தனை மெருகு.

காது கேளாத வக்கீல் நளினி. இன்ஸ்பெக்டர் சத்யராஜை முதலில் சார்ஜ் செய்து, அப்புறம் அவர் மனசறிந்து அவரையும் உதவிக்குக் கூப்பிட்டுக் கொண்டு, காதல் வலையில் சிக்கி.... என்று இவர் கதை வளர்கிறது. கோர்ட் காட்சியில் ஹியரிங் எய்டு வேலை செய்யாமல் அவர் தவிக்கும் காட்சி அமெச்சூர்த்தனமாகக் கையாளப்பட்டதால் காமெடியாகிவிட்டது பரிதாபம்.

சத்யராஜ்தான் பிரதான தூண். கச்சிதமான போலீஸ் மிடுக்கு. விசாரணை செய்யுமிடங்களில் அவருக்கே உரிய கிண்டல் கலந்த மாடுலேஷன். எல்லாம் பிரமாதம்தான். ஆனால் கட்டடமே சரியில்லாதபோது ஒற்றைத் தூணுக்கு என்ன கவர்ச்சி?

கதையின் ஆதாரக் களமே விபசார விடுதி என்பதற்காக, காட்சிகளில் அதைப் பரிபூரணமாக எக்ஸ்ப்ளாயிட் செய்யாமல் கௌரவமாகக் காட்சிகளை அமைத்ததற்காக மட்டும் டைரக்டரைப் பாராட்டலாம்.

தலைப்பில் மட்டும் கவிதை இருந்தால் போதுமா?



அடையும் ஆசையில் ஓடிவர — ஒரே கலகலதான்.

இடைவேளைக்கு அப்புறம்தான், முடிவுக்குக் கொஞ்சம் முன்னால்தான், டைரக்டருக்குக் கதையை எப்படியாவது வேறு பக்கம் கொண்டு போக வேண்டும் என்ற ஞானோதயம் ஏற்பட்டு, ரூட் மாறுகிறார். என்னதான் இருந்தாலும், ஐந்து லட்ச ரூபாயைப் பெட்டியில் வைத்து 'இந்தா' என்று தருவார்களா? குடும்பம் அது இது என்று ஒன்றுமே விசாரிக்காமலா பெண் கொடுப்பார்கள்? தேங்காய் சீனிவாசன் பார்ட் ஒத்துக் கொள்ள முடியாத விஷயம்தான்.

கதாநாயகன் இடைவேளைக்குப் பின்னாலாவது திருந்தி உழைத்துப் பாடுபட்டு நாலு காசு சம்பாதிப்பதாய்க் காட்டுவார்கள் என்று பார்த்தால் அந்த ஆசையில் மண்.

பாடல்கள் எல்லாமே ஓரளவு கேட்கும்படியாய் இருக்கின்றன. படமாக்கப் பட்ட விதமும் ரசிக்கும்படியாய்த்தான் இருக்கிறது. ஏறக்குறைய முக்கால் படம் கலகலவென்று இருந்ததை அப்படியே நீட்டி, சுபம் வரை கொண்டு போயிருந்தால் 'முழுநீள நகைச்சுவைச் சித்திரம்' பட்டம் கிட்டியிருக்கும்.

இப்போது என்னடாவென்றால் 'ஆற்றிலே ஒரு கால்; சேற்றிலே ஒரு கால்!'

— ஜெயமன்மதன்

## போட்டிக் கதை — 3

படுக்கையில் நாரினைப் போல் படுத்திருக்கிறேன். இன்னும் சிறிது நேரத்தில் இறுதிப் பயணம் தொடங்கிவிடும்.

மனசெங்கும் ஏதோ ஒரு சோகம், பாரமாக அழுத்திக் கொண்டிருக்கிறது.

வலப்புறம் பார்வையைச் செலுத்துகிறேன். என் சின்ன மகன் மாதவன் நின்று கொண்டிருக்கிறான்.

அவன் முகத்தில், 'ஏன் எங்களைத் தொந்தரவு பண்ணுறே?' என்ற எரிச்சல் இருக்கிறது.

'டேய்! என்னைப் பாருடா.... உன் அம்மாடா.... நான் செத்துப் போகணும்னு நினைக்கறியே.... நியாயமாடா...'

"என்ன விசாலாட்சி...! ஆறிப் போன பண்டங்களையே சாப்பிடறே.... ஏதாவது சூடாகச் சாப்பிடேன்..." என் கணவர்.

"வயிற்றிலே இருக்கிற புள்ளையைச் சுட்டுடுங்க...."

"பைத்தியம்.... பைத்தியம்.... படிச்சவளா, லட்சணமாக நடந்துக்கிறியா?"

"படிப்பை விடப் பாசத்துக்குச் செல்வாக்கு உண்டுங்க...."

"நீ என்னவோ வயிற்றிலே இருக்கிற புள்ளை மேலே ரொம்பவும்தான் பாசத்தைப் பொழியறே. அவன் உன்னைத் தாங்கப் போறதா நினைக்கறே. அவன் உனக்குச் சோறு போட்டுக் கடைசிக் காலத்திலே காப்பாற்றுவானு என்பதே சந்தேகம்..."

"அப்படி எல்லாம் சொல்லாதீங்க. என் மகன் அப்படி இருக்க மாட்டான்."

"நீ உனக்குள் அப்படியே நினைச்சுக்கிட்டிரு... தற்கால புள்ளையாண்டான்களைப் பற்றி உனக்குத் தெரியாது."

பிறக்க இருப்பது ஆணு பெண்ணு என்று உறுதியாகத்தெரியாததற்குமுன்பே,மாதவன் என் வயிற்றில் மூன்று மாதம் கர்ப்பமாக இருந்த போது எனக்கும் என் கணவருக்கும் நடந்த உரையாடல் இது.

அடப்பாவி மகனே! அவர் சொன்னது நூற்றுக்கு நூறு சரிதான்னு நிரூபிச்சுட்டியேடா...

'அம்மா, மகன் உறவுங்கிறது எவ்வளவு உயர்ந்தது, புனிதமானது, ஈடில்லாதது. அதை அசிங்கப்படுத்துகிறியேடா...'

எனது மகள் கௌசலா நின்று கொண்டிருக்கிறாள். அவளுக்குப் பக்கத்தில் அவளது புருஷன் கண்ணன் நின்று கொண்டிருக்கிறான்.

அவனது முகத்தில் சுளிப்பு இருந்தது. சீக்கிரம் ஊருக்குப் போக வேண்டும் என்ற அவசரம் இருந்தது.

"கௌசலா...! கொஞ்சம் வாயேன்..!" —கண்ணன் அவளை அழைத்துக் கொண்டு பக்கத்து அறைக்குச் சென்றான்.

"என்ன கௌசலா... சீரியஸ்னு உன் அண்ணன் தந்தி கொடுத்தாரு... நேற்று இரவே வந்துட்டோம்... காலை மணி பத்து ஆகுது... இன்னும் 'எதுவுமே' நடக்கலே...



எனக்கு உன் அண்ணன் மேலே எரிச்சலா இருக்கு..."

"இன்னும் கொஞ்ச நேரம் பொறுத்துக்குங்க..." —என் மகளும், மருமகனும் பக்கத்து அறையில்பேசிக்கொள்வதுகாதில்கேட்டது.

"எனக்கு இங்கே இருக்கவே பிடிக்கலேடி... உங்க அம்மாகிட்டே போறதுக்கே அருவருப்பா இருக்கு... ஒரே மூத்திர வாடை வயிற்றைப் புரட்டிக்கிட்டு வர்றது... நீ வேண்டுமானால் இங்கேயே இரு... நான் ஊருக்குப் போறேன்..."

"இன்னும் ரெண்டு மணி நேரம் பொறுத்துக்குங்க...."

"அப்படின்னா?"

"இன்னும் ரெண்டு மணி நேரத்திலே செத்துப் போயிடுவாங்கன்னு டாக்டர் சொல்லி இருக்காரு..."

"என்னமோடி... நீ சொல்றதாலே தங்கறேன்..."

பின்னர், இருவரும் அந்த அறையில்



# நன்றி கெட்ட நிழல்கள்

மணிக்கொடியான்

இருந்து வெளியே வந்து என் கால் மாட்டில் நின்று கொண்டனர்.

'ஒன்றும் தெரியாத அப்பாவிப் பொண்ணுன்னு உன்னே நினேச்சேன். நிறைய சூட்சுமம் தெரிஞ்சவடி நீ.'

'ஒரே ஒரு பெண் பிள்ளேன்னு பெரிய இடமாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுத்ததுக்கு இதையும் சொல்லுவே... இதற்கு மேலும் சொல்லுவேடி...'

'உன் புருஷன் என்ன சொன்னுன்? இங்கே இருக்கவே அருவருப்பா இருக்கா?'

'அவன் இந்த வீட்டுக்கு வரும்போதெல்லாம் நான் எவ்வளவு நல்லா கவனிச்சிருக்கேன். கத்தரிக்காய்ப் பொரியல், வாழைக்காய் பஜ்ஜி, மைசூர் பாகு, குலோப் ஜாமுன், இன்னும் வாரப் பத்திரிகைகளில் வர்ற சமையல் வகைகள் எல்லாம் செய்து கொடுத்தேனே... இப்ப எல்லாத்தையும் அவனுலே எப்படி மறக்க முடிஞ்சுது?

'நன்றிகெட்டத்தனமா என் சாவு நேரத்தை எதிர்பார்ப்பது எந்த வகையிலே நியாயம்?

'ஆனல்... அதோ பாரு... செக்கு உலக்கை மாதிரி நிற்கிறுனே... என் மூத்த மகன் ராமச்சந்திரன்... அவனும் நான் சாகப் போகிற நேரத்தைத்தானேடி ஆவலாக எதிர்பார்த்

## அருள்வாக்கு



இரண்டு விதத்தில் மநுஷ்யனுக்கு அடக்கம் ஏற்பட வேண்டும். ஒன்று, இந்திரியங்கள் அடங்கியிருப்பது. இம் புலன்களைக் கெட்ட வழியில் போக விடாமல் அடக்கி நல்வழியிலேயே கொண்டு வருவது ஒருவிதமான அடக்கம். இதை 'சமம்' 'சமம்' என்று சொல்வார்கள். "தலையே நீ வணங்காய்" பாடலில் அப்பர் ஸ்வாமிகள் இப்படித்தான் ஒவ்வொரு அவயவத்தையும் பகவத்பரமாக ஆக்குகிறதைச் சொல்லியிருக்கிறார்.

'சமத்'தோடு 'தமம்' என்பதைச் சேர்த்து 'சமதமாதி' என்று சொல்வதுண்டு. 'தமம்' என்பது மனஸை அடக்குவது. இரண்டுவிதமான அடக்கத்தில் ஒன்று வெறுமே இந்திரியங்களை மட்டும் வெளியில் கெட்ட கார்யத்தில் போக விடாமல் தடுப்பது — இதுதான் சமம். அடக்கத்தில் இரண்டாவது நிறைவானதமம்என்பதுமனஸையே.உள்ளே எழுகிற எண்ணத்தையே அடக்கி விடுவது. கார்யத்தில் கெடுதல் செய்யாமல் இந்திரியங்களை அடக்கிவிடலாம். ஆனாலும் மனஸானது அந்தக் கெட்டதுகளையே கல்பித்துக் கொண்டு, அதாவது மானஸிகமாக அந்தக் கெடுதல்களைச் செய்து கொண்டு அதிலே ஸந்தோஷப்பட்டால், வெளி அடக்கத்தால் ஒரு ப்ரயோஜனமும் இல்லை. உள்ளடக்கம்தான் 'தமம்' என்பது.

ஆனால் இந்த உள்ளடக்கம் ஸித்திப்பது ரொம்ப சிரமம். முதலில் வெளி அடக்கமான 'சம'த்தைப் பழகிப் பழகி முன்னேறினால்தான் பிறகு 'தமம்' உண்டாகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

துக் கொண்டிருக்கிறான்?

கண்களை இருட்டிக் கொண்டு வருகிறது. மிகுந்த சிரமத்துடன் கண்களை மலர்த்துகிறேன். இன்னும் கூட ராமச்சந்திரன் அதே இடத்தில்தான் நின்று கொண்டிருக்கிறான்.

மெல்லத் தலையாட்டில் பார்வையைச் செலுத்துகிறேன். என் கணவர் சோகமாக உட்கார்ந்திருக்கிறார். அவரைப் பார்த்ததும் கண்களில் கண்ணீர் மல்குகிறது.

"இங்கே வாங்க... உங்ககிட்டே ஒண்ணு சொல்லணும்..." — ராமச்சந்திரனை அழைத்துக் கொண்டு பக்கத்து அறைக்குச் செல்கிறாள் அவன் மனைவி.

இவள் என்ன சொல்லப் போகிறாளோ?

நான் இந்தக் கெழம் மண்டையைப் போடுகிற வரைக்கும் என் அப்பா வீட்டிலே போய்த் தங்கி இருக்கிறேன்."

"என்னடி சொல்றே?"

"ஆமாங்க... அவங்க உங்களோட அம்மாவா இருக்கலாம். உங்களை ரொம்பவும் கஷ்டப்பட்டுப் பெத்திருக்கலாம். அதற்காக அவங்களோட மலஜலத்தை எல்லாம் நான் அள்ளிக் கொட்டணும்னு சொல்றது எனக்குப் பொருத்தமாகப் படலே."

"கொஞ்சம் மெதுவாகப் பேசு... அவங்க காதிலே விழுந்திடப் போவுது..."

"விழுந்தா விழட்டுமே...!

"அவங்க மனசு புண்படற மாதிரிப் பேசாதே..."

மீண்டும் இருவரும் என்னருகில் வருகிறார்கள்.

என் கணவர் நிலைமையைப் புரிந்து கொண்டு, முறத்தையும் விளக்கு மாற்றையும் எடுத்து வந்து சுத்தம் பண்ணுகிறார்.

பார்வையைச் சுழல விடுகிறேன். சுவரில் ஒரு புகைப்படத்தில் என் மாமி சிரிச்சுக்கிட்டு இருக்கிறார்.

அந்தச் சிரிப்பு... என்னைப் பார்த்துக் கேலியாய்ச் சிரிப்பது போல இருக்கிறது.

நினைவு அலைகள் பின் நோக்கிச் செல்கின்றன.

"ஏண்டி...! விசாலாட்சி...! அங்கே பாருடி... அம்மா படுக்கையில மலஜலம் கழிச்சிருக்காள். நீ இங்கே வந்து புஸ்தகம் படிச்சுக்கிட்டிருக்கே..." என் கணவர் கேட்டார்.

"அதுக்கு இப்ப என்ன செய்யச் சொல்றீங்க?

"போய்ச் சுத்தம் பண்ணுடி... இன்னும் இருக்கப் போறது ரெண்டு நாளோ, மூணு நாளோ... சாகப் போற நேரத்திலே அவங்க மனசு புண்படக் கூடாதுடி..."

"நானும் மனுஷிதாங்க. என்னால் அந்த அருவருப்பைத் தாங்கிக்க முடியலே...

அவங்க மனசு படற பாடு உனக்கு இப்பத் தெரியாதடி... உனக்கும் ஒரு காலத்திலே அப்படி ஒரு நிலைமை வந்தால் தான் அந்தக் கொடுமை தெரியும்."

கூறிவிட்டு அவரே சுத்தம் செய்யப் போனார்.

இன்று... அவர் கொடுத்த சாபம் பலிக்

கிறதோ?

இந்தக் கொடுமைகள் வினை விதைத்தவனின் அறுவடையா? அல்லது...

தலைமுறைக் கழிவுகளின் அவசரத் தனங்களா?

எதுவும் புரியாத குழப்பநிலை.

இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக இந்த மானுடத்தின் சுயநலம்தான். பயன் தந்த ஒன்று பாரமாகும் போது அதை வெறுத்து ஒதுக்கிவிடும் நன்றிகெட்டத்தனம்தான்.

நன்றி கெட்டத்தனம் நெருக்கமான உறவுகளில் கூட விரிசல் விழ வைத்து விட்டதே...

இனி பிறக்கும் பாக்கியம் இருந்தால் மனிதப் பிறவி எடுக்கவே கூடாது. இப்படி எல்லாம் அவஸ்தைப்பட்டு இறுதிக் காலத்தில் இறக்கக் கூடாது.

தலைப்புறத்தில் இருந்த என் கணவரைப் பார்க்கிறேன்.

இவர் மட்டும் எனக்காக ஏன் அழுகிறார்? நான் இவருக்கு என்ன செய்தேன்? இது நாடகமோ?

நான் பிரியறதாலே இவருக்கு என்ன பெரிய பாதிப்பு வந்துவிடப் போகிறது?

ஒருவேளை, என்னை இவர்கள் எப்படி நடத்துகிறார்களோ, அப்படியே தன்னையும் நடத்துவார்களோ என்ற அச்சத்தில் அழுகிறாரோ?

நாளைய கசப்புகள் இன்றே இவரது கண்களில் கசிகிறதா?

அவரையே உற்றுப் பார்க்கிறேன்.

'ஏங்க! இது சுயநலக்கார உலகம்ங்க. பயன்பட்டவங்களாக இருந்தாலும் நிகழ் காலத்திலே பயன்படுறாங்களான்னுதான் பார்க்குது.

'நிகழ் காலத்திலே பயன் தரலேன்னா எல்லாமே பாரமாயிடுதுங்க.

'என் உதிரத்தைச் சிறு வயதில் உறிஞ்சி, உறிஞ்சி வளர்ந்த புள்ளைங்க, இன்று என் உடம்பிலே ஒட்டி இருந்த கொஞ்ச நஞ்ச ரத்தத்தையும் உறிஞ்சுக்கிட்டாங்க.

நிறைய அவஸ்தைகளைச் சுமந்து, தியாகங்களைச் செய்து வளர்த்து ஆளாக்கிய எனக்கே இந்த நிலைமைன்னா, நாளை உங்களுக்கு ஏதேனும் ஒண்ணு நேர்ந்தால் இவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள்?

'சோகம் ஏற்படுத்த வேண்டிய ஒருத்தரோட சாவு மகிழ்ச்சியைக் கொடுக்குதுன்னா அதை விடக் கொடுமை இந்த உலகத்தில் வேறென்ன இருக்க முடியும்ங்க?

'கையிலே வலுவிருக்கும் போதே செத்துப் போறவங்கதாங்க புண்ணியவான்கள். உங்களுக்குக் கைகால்லே அசைவு இருக்கும் போதே கண்ணை மூடிடுங்க...

இன்னும் நிறையச் சொல்ல வேண்டும் போலத் தோன்றுகின்றது. வார்த்தைகள் வரவில்லை.

கண்களை இருட்டிக் கொண்டு வருகிறது. யாரோ அழைப்பது போலத் தோன்றுகிறது!

# வாசகர் பட்டி மன்றம் - 9
# பரிசு ரூ 300/-




திருச்சியிலும் மற்றும் சில ஊர்களிலும் கல்லூரி யூனியன் தலைவர் தேர்தல் தேவையில்லை என்று நிர்வாகம் கூறியதால் சில கல்லூரிகள் காலவரையறையின்றி மூடப்பட்டுள்ளன. எனவே,

**கல்லூரிகளில் மாணவர் யூனியனும் தேர்தலும்**
**கண்டிப்பாகத் தேவை;**
**கண்டனத்துக்குரியவை!**

உங்கள் கருத்து என்ன? (யோசனை: கொப்பம்பட்டி செ. அன்புமதியழகன்.)

அரைப்பக்க அளவில் எழுதி அனுப்பப்படும் கட்டுரைகளில் இருதரப்பிலும் ஒவ்வொரு கட்டுரை சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகும்; இவை தலா ரூ. 100 பரிசு பெறும்.

மற்ற கட்டுரைகளிலிருந்து இரு கட்சிகளுக்கும் பிரதிநிதித்துவம் அளித்து ஐந்து ஐந்து முக்கியக் கருத்துக்கள் மட்டும் பிரசுரமாகும். இவற்றுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 10.

ஒவ்வொரு கட்சியும் பெறும் மதிப்பெண் விவரங்கள் இடம்பெறும்.

**முடிவு தேதி: 13.10.86.**

கோரிக்கை: உறையின்மேல் பட்டி மன்றம் — 9 என்று குறிப்பிடவும்.

கீழே விலாசம் எழுதி இந்த அரைப்பக் கத்தை முழுவதுமாகக் கத்தரித்து உங்கள் கட்டுரையுடன் இணைக்கவும்.

பெயர்: ....................

விலாசம்: ....................

....................

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

9 தாமஸ் தனது கிரிமினல் வாழ்க்கையில் சந்தித்த பிரும்மாண்டமான அதிர்ச்சி இதுதான். தன் கண்கள் மூளைக்கு உணர்த்திய காட்சியின் அர்த்தத்தை, அபத்தத்தை நம்ப மறுத்தான். இதய இயக்கம் வேகம் கூட்டிக் கொண்டது. உடனடியாய் வியர்வை.

எப்படி? எப்படி இது?

நாகராஜன் விழிகள் உறைந்திருக்க..... மார்பில் அந்தக் கத்தி ஏற்படுத்தின ரத்தச் சகதியில் இருந்து இன்னும் மெதுவாகப் புது ரத்தம் புது வழி அமைத்து இறங்கிக் கொண்டிருக்க, சின்சியராய் செத்துப் போயிருந்தார். ஸ்டாண்டில் செருகின பேனாவாய்க் கத்தி!

ரொம்பச் சமீபமாய் நிகழ்ந்திருக்கிறது குற்றம். சில நிமிடங்களுக்கு முன்னால்தான் நடத்தப்பட்டிருக்கிறது செயல்.

யார்?

தாமசிற்கு அடுத்து என்ன செய்வது என்று புரியவில்லை. மணிக் கட்டில் பார்த்தான். 8.45 ஆகியிருந்தது. காம்பௌண்ட் சுவரில் தாவி ஏறின போது மணி எட்டரை. அப்போதுதான் கார் புறப்பட்டுச் சென்ற சப்தம் கேட்டது. திட்டப்படி சுகுமாரும், மாயாவும் அதில் சென்றிருக்கிறார்கள். அவர்கள் புறப்படும் போது இவர் உயிருடன்தான் இருந்திருக்கவேண்டும்.

எட்டரையில் இருந்து எட்டே முக்காலுக்குள், நான் பின்புறத்தில் இருந்து இங்கே வருவதற்குள் துரிதமாக நடந்திருக்கிறது இந்தக் கத்திக் குத்து!

இதென்ன குழப்பம்! அழகாய், விரிவாய்த் திட்டமிட்டுக் கொல்ல வரும்போது, வேறு ஒருவன் கொன்றுவிட்டுச் சென்றுள்ளானே... அவன் இப்போது பங்களாவுக்குள்ளேயே இருப்பானா? இல்லை வெளியேறியிருப்பானா?

தாமஸ் யோசிக்க யோசிக்கக் குழப்பம் இரண்டு, நான்கு, எட்டு, பதினாறு என்கிற ரீதியில் பெருகிக் கொண்டேயிருந்தது.

எல்லா யோசனையும் பிறகுதான். இப்போது நான் என்ன செய்வது? ஓடி விடுவதா விரைவாக?

தாமஸ் உடனே அங்கிருந்து அகன்றிடத் தீர்மானித்துக் கதவை

நோக்கி நடந்தவன் நின்றான். இங்கே நான் வந்த நோக்கம் இரண்டு. 1. நாகராஜனைக் கொலை செய்தல், 2. பழியை அசோக் மேல் சுமத்துதல்.

இதில் முதல் காரியம் வேறு யாராலோ நிகழ்த்தப் பட்டிருக்கிறது. இரண்டாவது பகுதியை மட்டுமாவது நான் நிறைவேற்றினால் என்ன?

தாமஸ் மறுபடி நாகராஜனை அணுகினான். பார்த்தான்.

முகத்தில் கோணலாகத் தொங்கின மூக்குக் கண்ணாடியின் ஒரு கண்ணாடி முழுக்க ரத்த அபிஷேகம் செய்திருந்தது. மற்றதில் தெறித்த புள்ளிகள். தவிர... நாற்காலியைச் சுற்றிலும் புள்ளிப் புள்ளியாய் ரத்தச் சிதறல்கள் இருந்தன.

எதையும் மிதித்து விடாமல் நாகராஜனின் கையருகே இருந்த இண்டர்காமின் ரிசீவரை எடுத்துத் தனியாகத் தொங்க விட்டான்.

வேகமாக அறையை விட்டு வெளியேறினான். மாடிப்படிகளில் சரசரவென்று ஏறி நாகராஜனின் படுக்கை அறைக்குள் நுழைந்து பங்களாவின் வாசல் கேட்டைப் பார்க்க முடிகிற ஜன்னல் அருகே நின்று கொண்டு பார்த்தான்.

**டா**க்சி இப்போது அசோக் நகரின் விளிம்பைத் தொட, அசோக் சொன்னான், ''நேரா போயி, நாலாவது லெஃப்ட் கட்டிங்ல திரும்பு.''

சொன்னபடி திரும்பியது டாக்சி.

''இன்னும் போகணும். நீ போய்க்கிட்டே இரு, சொல்றேன்.''

தார் சாலை நன்றி, மீண்டும் வருக என்று விடைபெற்றுக் கொள்ள, மண் சாலை வருக, வணக்கம் என்றது. காதலுடன் வந்த காற்று தலைமுடியில் சில்மிஷம் செய்தது.

''இதான்ப்பா, நிப்பாட்டு'' என்றான் அசோக்.

டாக்சி அந்தப் பங்களாவின் முன் காம்பௌண்ட் கேட் அருகே தயங்க, ''உள்ளே போகணுமா?'' என்றான் டிரைவர்.

''வேணாம். இப்படியே நிறுத்திக்கலாம். அரை மணி நேரத்துக்குள்ளே வந்துடறேன்'' என்று இறங்கினான் அசோக்.

டாக்சியின் சத்தம் கேட்டதுமே, தன் கூண்டில் அமர்ந்திருந்த சுந்தரம் எழுந்து கொண்டு, நீளமான டார்ச் லைட்டை டாக்சி பக்கம் அடித்துப் பார்த்தான்.

''நீங்களா தம்பி, வாங்க'' என்று அவசரமாக கேட்டைத் திறந்தான்.

''அப்பா இருக்காங்களா சுந்தரம்?''

''இருக்காங்க தம்பி. ரீடிங் ரூம்ல படிச்சிகிட்டிருக்காங்க. போங்க.''

அசோக்வீட்டின் வாசலை நோக்கி நடக்க...

மாடியில் நாகராஜனின் அறை ஜன்னலில் இருந்து இவன் வருகையைப் பார்த்துவிட்ட தாமஸ் வேகமாக அறையை விட்டு வெளியேறினான். படிகளில் இறங்கினான். ஹாலை அடுத்த பகுதியில் தாவி மறைவாக நின்றான். அவன் நின்று கொண்டிருந்த இடத்திற்கு அருகே ரெஃப்ரிஜிரேடர். அதன் அருகே அந்த உயர மேஜை. அதன்மேல் டெலிபோன். அதனருகில் இண்டர்காம்.

நின்ற இடத்திலிருந்து வாசலையும், ரீடிங் ரூம் வாசலையும் ஒரே சமயத்தில் பார்க்க முடிந்தது.

அசோக்பாண்ட்டின் இரண்டுபாக்கெட்டுகளிலும் கைகளை நுழைத்துக் கொண்டு மெதுவாக நடந்து போர்ட்டிகோவை அடைந்து, ''ஜின்னி'' என்றான். பின்னர் அது உறங்குவதைப் பார்த்தான்.

கதவைச் சமீபித்து அது லேசாகத் திறந்திருப்பதைப் பார்த்து உள்ளே நுழைய நினைத்தவன் நின்றான். அருகே மணி படம் போட்டிருந்த சுவிட்சை அழுத்தினான். உள்ளே எலெக்ட்ரானிக் மியூசிகல் பெல் ஒலிப்பதைக் கேட்டான்.

காத்திருந்தான்.

உள்ளே மறைவில் நின்ற தாமஸ் பரிதவித்தான். சுத்த மடையனாய் இருப்பான் போலிருக்கிறதே... சொந்த வீட்டுக்குள், அதுவும் கதவு திறந்திருக்கும் போது உள்ளே வர அனுமதி எதிர்பார்த்து பெல் அடிக்கிறானே...

அசோக் கொஞ்சமும் சந்தேகமில்லாமல் உள்ளே நுழைந்தால்தான் எனக்குச் சௌகரியம். இவன் ஏதாவது குளறுபடி செய்து விடுவானா?

அசோக் மீண்டும் ஒருமுறை மணியழுத்தி விட்டு, பிறகு கதவை உள்ளே தள்ளி நுழைந்தான். ஹால் முழுக்க ஆபரேஷன் தியேட்டர் வாசலில் போல அடர்த்தியான அமைதி. அங்கங்கே விளக்குகள் இருளை அலம்பின. பூனை விழித்துப் பார்த்தது.

நேராய் ரீடிங்ரூமை நோக்கிப் போனான் அசோக். அதன் லாமினேட்டட் கதவில் ஒற்றை விரல் மடக்கி மெலிதாக மூன்று முறை தட்டினான். பதில் இல்லாமல் போக, கைப்பிடியை அழுத்தி, கதவை உள்ளே தள்ளி நுழைந்தான். ஸ்பிரிங் கதவு தானாகச் சாத்திக் கொண்டது. டைனிங் டேபிளுக் கடியில் பூனை உலாத்தத் துவங்கியது.

முதுகு காட்டிக் கொண்டிருந்த நாகராஜனைப் பார்த்தான்.

''அப்பா!'' என்றான்.

இங்கே தாமஸ் உடனே பாய்ந்து இண்டர்காமை எடுத்து எண் அழுத்தி, நாகராஜனின் குரலில் பதற்றம் சேர்த்துக் கொண்டு, ''அய்யோ! சுந்தரம் வா! காப்பாத்து! அய்யோ!'' என்றான் அவசரமாக. வைத்து விட்டான்.

அசோக் பதில் பேசாத அப்பாவிடம் கோபமாக, ''வரச் சொன்னீங்க. வந்திருக்கேன். மூஞ்சைத் திருப்பிக்கிட்டு உக்காந்திருந்தா என்ன அர்த்தம்?'' என்றான் நின்ற நிலையிலேயே. கைகளை மார்பின் குறுக்கே கட்டிக் கொண்டான்.

வாட்ச்மேன் சுந்தரம் இண்டர்காமில் தன் முதலாளியின் அவசரமான குரலில் பதறிப் போய்ப் பங்களாவின் வாசலை நோக்கி ஓடி வந்தான்.

அதற்கும் தன் அப்பாவிடம் பதில் இல்லாமல் போக... அசோக் வேகமாக நெருங்கி

அந்தச் சுழலும் நாற்காலியின் முதுகைப் பற்றித் தன் பக்கமாகத் திருப்பினவன் ஹக் என்று அதிர்ந்தான்.

கண்கள் விரிந்து, உதடுகள் பிளந்து, முகம் வெளுத்து, கசகசவென்று வியர்த்து, விரல்களில் நடுக்கம் உணர்ந்தான் அசோக்.

மைகாட்! இதென்ன கொடுமை? அப்பாவைக் கொன்றது யார்? கொன்றதா? உயிர் இருக்கிறதா, இல்லையா?

நடுங்குகிற விரல்களை நாகராஜனின் மூக்கருகில் கொண்டு சென்று உஷ்ணக் காற்றை உணர முற்பட்டான். உணர முடியவில்லை. வயிற்றைக் கவனித்தான். அசைவு இல்லை.

என்ன, ஏது என்று புரியாமல் அப்படியே திகைத்து நிற்க...

"சொந்த அப்பாவையே கொன்னுட்டியேடா பாவி!" என்று முதுகுக்குப் பின்னால் குரல் கேட்க... திரும்பிப் பார்த்தான்.

பதைப்புடன், ஆவேசத்துடன், கையில் லத்தி சைசில் ஒரு தடியுடன் நின்று கொண்



டிருந்தான் சுந்தரம்.

"சுந்தரம், "என்ன பேசறே? அப்பாவை யாரோ கொன்னுருக்காங்க."

"யாரோவா? பாவி! செய்யறதையும் செஞ்சிட்டு இப்படிப் பேசறியே..."

"நான்சென்ஸ்! எங்கே அந்த மாயா? அவ தான் கொன்னுட்டா. வா, போலீசைக் கூப்பிடலாம் உடனே."

"சின்னம்மா வெளில புறப்பட்டுப் போய்ட்டாங்க... அய்யா மட்டும்தான் தனியா இருந்தார். இப்படி அநியாயமா கொன்னுட்டியே... இரு... நகராதே... இந்தரூமை விட்டு வெளியே வராதே... உடனே போலீசுக்குத் தகவல் தர்றேன்."

சுந்தரம் அவனைப் பார்த்துக் கொண்டே பின்பக்கமாக அறையை விட்டு ஹாலை நோக்கி நடந்தான்.

சுந்தரம் அவசரமாக ஓடி வந்து ரீடிங் ரூமுக்குள் நுழைந்த விநாடியே, தாமஸ் சுடப்பட்ட தோட்டாவாய் பங்களாவின் வாசலுக்குப் பாய்ந்து வெளியேறினான். காம்பௌண்டை நோக்கி ஓடினான். சட்டென்று எவ்விக் குதித்தான் அந்தப் பக்கம். பங்களாவை விட்டுத் தொலை தூரம் விலகிப் போய்த் தனது மோட்டார்பைக்கைக் கிளப்பிக் கொண்டு பிரதேசத்தை விட்டு அகன்றான்.

இங்கே அத்தனை குழப்பத்திலும் அசோக்கிற்கு ஒன்று தெளிவாகப் புரிந்தது.

இந்தக் கொலையில் நாம் சிக்க வைக்கப்பட்டிருக்கிறோம்!

சுந்தரம் நடிக்கிறான். நடிக்க வைக்கப்பட்டிருக்கிறான். எல்லாம் திட்டமிட்ட சதி!

சுந்தரம் விரைவாய் ஹாலுக்கு வந்து டெலிபோனை எடுத்து 100 டயல் செய்ய, முதலில் 1 சுழற்றி, அடுத்து 0 சுழற்றி, மீண்டும் 0 சுழற்றப் போகும்போது அவனைத் தடுத்து அவனிடமிருந்து ரிசீவரைப் பிடுங்கி வைத்தான் அசோக்.

"இரு சுந்தரம். நான் கேக்கிற கேள்விக்கு பதில் சொல்லிட்டு நீ ஐ. ஜி.க்கு வேணும்னாலும் போன் செய். நான் எங்கேயும் நகரலே." என்றான்.

"இன்னும் என்ன கேக்கணும்?"

"என்னை நேரா பார்த்துச் சொல்லு. இந்தச் சதிக்கு எவ்வளவு பணம் உனக்குத் தர்றதா பேச்சு?"

"சதியா?"

"பின்னே? எங்கப்பாவைச் சந்திக்கத் தனியா என்னை வரச் சொல்லி, ஏற்கெனவே கொலை செஞ்சி, அதிலே என்னை மாட்ட வைக்கிறதுக்காக உன்னைப் பயன்படுத்தி... சொல்லு, எல்லாம் மாயாவோட வேலை தானே?"

"ராஸ்கல்! அப்பாவைக் கொலை செஞ்சிட்டு எங்கிட்டே வசனமா பேசிக்கிட்டிருக்கே? நகரு! இப்போ நகரப் போறியா இல்லையா?" என்று ஒரு காட்டுத்தனமான மூர்க்கத்துடன் அசோக்கைப் பிடித்துத் தள்ளி விட்டு, மறுபடி 100 டயல் செய்தான் சுந்தரம்.

"ஹலோ... அவசரப் போலீசா? சார், இங்கே அசோக் நகர்ல ஜே ப்ளாக்கிலே நாப்பத்தி ஏழாம் நம்பர் — கோமதீஸ்வரர் நாகராஜன் பங்களாலேர்ந்து வாட்ச்மேன் பேசறேன் சார். இப்போ கொஞ்சம் முன்னாடி என் முதலாளியை அவர் பையன் அசோக் கத்தியால குத்திக் கொலை செஞ்சுட்டான். அவனை நீங்க வர்ற வரைக்கும் தப்பிப் போகாம நான் பார்த்துக்கறேன். சீக்கிரம் வாங்க" என்று வைத்த சுந்தரம், "காப்பாத்து சுந்தரம்—ன்னு அவர் கத்தியும், என்னால காப்பாத்த முடியலையே... நான் வர்றதுக்குள்ளே முடிச்சிட்டியேடா பாவி" என்றான்.

"கத்தினாரா? எப்போ?"

"இப்போ! பின்னே எப்படி நான் கேட்டு லேர்ந்து இங்கே ஓடி வந்தேன். இண்டர்காமிலே கத்தினாரே... ஏண்டா பாவி! அப்பனையே கொல்றியே... உருப்படுவியா...?"

அசோக்கின் பதற்றம் அதிகரித்தது.

என்ன இது இப்படிப் பேசுகிறான்? அப்பா எப்போது இண்டர்காமில் கத்தினார்? நான் வந்தேன். சுந்தரம் கதவு திறந்தான். உள்ளே நடந்தேன். அறைக்குள் வந்தேன். முதுகு காட்டி அமர்ந்திருந்த அப்பாவின் நாற்காலியை என் பக்கம் திருப்பினேன். அவ்வளவுதானே நான் செய்தது!

போலீசிடம் நான் கொலை செய்ததைக் கண்ணால் பார்த்ததாகக் கூசாமல் இவன் சொல்வானோ? போலீஸ் நம்புமோ? நான் செய்யாத ஒரு காரியத்திற்காக நான் பயப்படுவது அவசியம்தானா? தீர விசாரிக்காமல் போலீஸ் ஒரு முடிவுக்கு வந்துவிடுமா, என்ன?

வரட்டும், விசாரிக்கட்டும். நடந்ததை அப்படியே சொல்கிறேன். ஆனால்.... ஆனால்... எனக்கும், அப்பாவுக்கும் பகை இருக்கும் காரணத்தால், நேற்று நான் நண்பனுடன் வந்து வேலைக்காரர்கள் மத்தியில் சொத்து சம்பந்தமாகக் கடுமையாகப் பேசிவிட்டுப் போன காரணத்தால், இப்போது இந்த இக்கட்டான சூழ்நிலையில் நான் இங்கே இருப்பதால், சுந்தரம் சாட்சி சொல்வதால்...

போலீஸ் என்னைத்தான் முழுக்க, முழுக்கச் சந்தேகப்படுமோ? என்னைக் கைது செய்வார்களா? குற்றம் சுமத்துவார்களா? சுமத்தின குற்றத்திற்குப் பொய் ஆதாரங்கள் சேர்ப்பார்களா? சேர்த்துத் தண்டனை வாங்கிக் கொடுப்பார்களா?

தண்டனை! என்ன தண்டனை?

...ஆகவே குற்றவாளி அசோக்கிற்கு மரண தண்டனை விதிக்கிறேன்...

"நோ!" என்று கத்தினான் வாய்விட்டு.

என்ன ஆனாலும் சரி, இந்த இடத்தை விட்டு விலகி விடுவதுதான் இப்போதைக்குச் சிறந்தது என்று தீர்மானித்து, அசோக் வாசலை நோக்கித் திடீர் ஓட்டத்தைத் துவக்க... அவனைத் துரத்திக் கொண்டு சுந்தரம் பாய...

பங்களாவின் வாசலில் வந்து நின்றது போலீஸ் வேன்.

(தொடரும்)

மின்னும்
மேனி மெருகுக்கு
ரெக்ஸோனா

மின்னி மிளிரும் மேனி...எந்நாளும்
உங்கள் பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா
(தேவதாரம்) ஆகிய நாலு வகை
இயற்கைத் தைலங்களின் நற்கலவையான
ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு
இயல்பான வழியாகும்.







# ரெக்ஸோனா

உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 91 2416 TM

# சுயநல நோக்கு பெண்களிடமும் உண்டு!

## இங்கிதம் வேண்டாமா?

சென்னை மாநகராட்சி, "ஹெல்த்டிபார்ட்மெண்ட்"டிலிருந்து, "சென்சஸுக்காகச் சில இளைஞர்கள் வந்தனர். எதிர்வீட்டில்—கணவன் அலுவலகம் சென்றதால், தனித்திருந்த—இளம்பெண்ணிடம் விசாரித்தனர். வெட்கத்துடன் பதிலளித்து வந்தாள். "நிரோத் உபயோகிக்கிறீர்களா?" என இளைஞர்கள் கேட்டதும் அவளது வெட்கம் கோபமானது. தொடர்ந்து ஒரு தெருச் சண்டை அங்கு தொடங்கி விட்டது. இதுபோன்ற வேலைக்குப் பெண்களை நியமித்தால் அந்த ரங்கமாய் விசாரித்து — சரியான விவரம் சேகரிப்பார்களே?

— அண்ணு அன்பழகன், சென்னை — 112.

## நிச்சயதார்த்தத்துக்குப் பின் நிராகரிப்பு

எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவருக்கு சமீபத்தில் நிச்சயதார்த்த வைபவம் நடந்தது. வரதட்சிணையைப் பற்றி மூச்சுக் கூட விடாத நண்பருக்குத் திடீரென்று ஓர் அதிர்ச்சியான செய்தி வந்தது. நிச்சயம் செய்யப்பட்ட திருமணம் தடைபட்டது. விஷயம் என்னவென்று விசாரிக்கப் போனால், பெண்ணுக்கு வங்கியில் வேலை கிடைத்து விட்டதாம்; ஆகவே அதிக அந்தஸ்தும் வருவாயுமுள்ள மாப்பிள்ளையைத் திருமணம் செய்து கொள்ள விரும்பி இந்தக் தனியார் துறை சிப்பந்தியை உதறிவிட்டாராம்! வரதட்சிணையை எதிர்த்து ஆவேசக் குரல் எழுப்பும் பெண்கள் இப்படிப்பட்ட சுயநல நோக்கு தங்கள் இனத்திலும் உண்டென்பதை உணரட்டும்!

— ஆனந்த், ஆங்கரை.

## ஆசை காட்டி மோசம் செய்தால்....

"வீடுகளில் நவீனக் கழிப்பறைகளைக் கட்டுங்கள் ரூ. 600 மான்யம் தருகிறோம்" என்று நகராட்சிகளில் அறிவிக்கிறார்கள். ஆனால் வீடுகளில் நவீனக் கழிப்பறைகளைக் கட்டி விட்டு செப்டிக் டாங்க் நிரம்பி விடும் பொழுது கழிவுகளை அகற்றப் பொதுமக்கள் படும்பாடு சொல்லி முடியாது. நகராட்சிகளில் ரூ. 10/— கட்டணம் கட்டிவிட வேண்டும். பிறகு நகராட்சி துப்புரவுப் பணியாளர்களிடம் பேரம் பேசி 250, 300 என்று ரூபாய் கொடுத்துத்தான் காரியத்தை முடிக்க வேண்டியிருக்கிறது.

— கே. எஸ். குமார், விழுப்புரம்.

## மாதத்தில் எட்டு நாள்....

இங்குள்ள அரசுப் பொது நூலகம் உள்ளது. கடந்த ஒரு வருடத்தில், மொத்தமாகப் பத்து மாதம் மூடியே கிடந்தது. ஆனால் நூலகர் வேலை பார்த்ததாகக் கூறி, திண்டுக்கல் சென்று மாதா மாதம் சம்பளம் பெற்றுக் கொண்டு போய் விடுவார். கடந்த இரு மாதங்களாக, மாதத்தில் எட்டு நாள் மட்டுமே திறந்திருந்தது. அதிலும் 30.8.86 க்குப் பின் இன்று 5 தேதி வரை திறக்கப்படவேயில்லை.

— வி. பழனிச்சாமி, எரியோடு.

## ஒலிபெருக்கி பக்தி!

பக்தி உணர்வு என்பது இதய பூர்வமானதாக இருக்க வேண்டும். ஆனால் இன்றைய மக்கள் அதை விளம்பரமாக்கமைக் வைத்து வெளிப்படுத்திக் கொண்டு அந்த உணர்வையே வெறுக்கச் செய்துவிடுகிறார்கள். எங்கள் வீட்டிற்கு அருகில் ஒரு பக்கம் சர்ச். மறுபக்கம் ஒரு பிள்ளையார் கோயில். இன்னொரு திசையில் பெருமாள் கோயில். ஏதேனும் ஒரு விசேஷம் என்றால் மூன்று திசையிலும் அந்தக் கோயிலுக்கு ஏற்ற பாடல்களை ஒலிபெருக்கி காதைச் செவிடாக்குகிறார்கள். போதாக்குறைக்குச் சில சமயம் பழுதடைந்த ரிகார்ட் பிளேயர் பாட்டைக் கொலை செய்யும். நேரம் விழுந்த ரிக்கார்டுகள் கொஞ்சம் நஞ்சம் இருக்கும் பொறுமையையும் போக்கி விடும்.

— ரமணி ரங்கநாதன், அரும்பாக்கம்.

* குழந்தைக் கலைஞன் கிளின்ட்.



# ஓவியங்கள் கூறும் ஒரு சோகக் கதை!

ஓயாத மழை. அதை லட்சியம் செய்யாத நீண்ட கியூ! எதற்கு? ரேஷன் கார்டா? வேலை வாய்ப்பா? அப்படி ஏதும் இருந்தால் புரிந்து கொள்ளலாமே!

ஓர் ஓவியக் கண்காட்சியைப் பார்க்கத்தான் மக்கள் மழையைப் பொருட்படுத்தாமல் குடை பிடித்துக் கொண்டு ஆவலுடன் கியூவில் நின்றார்கள்!

நம்ப முடிகிறதா? இந்த அதிசயம் கேரளாவில் நடந்தது.

கண்காட்சியில் இடம்பெற்ற படங்கள் அனைத்தையும் வரைந்தது கிளின்ட் என்ற சிறுவன். வண்ண ஓவியங்களும் ஸ்கெட்ச்களும் நம்மைப் பிரமிக்கச் செய்கின்றன. கூடவே ஒரு பெருமூச்சும் எழுகிறது — தன் பெயர் சொல்ல சுமார் 22,000 படங்களைத் தீட்டி வைத்துள்ள கிளின்ட் இப்போது உயிரோடு இல்லை! இத்தனை அழகிய படங்களை வரைந்துவிட்டுத் தனது ஆறுவது வயதிலேயே அவன் மறைந்துவிட்டான் என்று அறிந்ததும் துக்கம் தொண்







டையை அடைக்கிறது.

கிளின்ட் கொச்சி அருகே உள்ள தேவரா என்னும் ஊரில் 1976 ஆம் வருஷம் மே மாதம் பிறந்தான். பெற்றோரின் ஒரே பிள்ளை. பிறந்த பத்தாவது மாதத்திலேயே படம் வரைய ஆரம்பித்த கிளின்டை அவன் தந்தை ஜோசப்பும், தாய் சின்னம்மாவும் மிகவும் ஊக்குவித்தனர்.

பள்ளிப் பருவத்தில் தான் கேட்ட கதைகளையும் படித்த பாடங்களையும் படங்களாக வரையலானான் கிளின்ட். அவனுக்கு மிகவும் பிடித்தது ஹிந்து புராண இதிகாசங்கள்தான். பலவிதமான கணபதி படங்களை கிளின்ட் வரைந்தான். அவன் நேரில் பார்த்திராத ஆந்தை, சிறுத்தை, புலி போன்ற மிருகங்களைக் கூட அவன் சித்திரத்தில் பல கோணங்களில் தீட்டினான்.

மூன்றாவது வயதில் கிளின்டுக்குச் சிறுநீரகக் கோளாறு ஏற்பட்டு மெள்ள முற்ற ஆரம்பித்தது. பள்ளிக்குச் சென்று வருவது போல் பல ஆஸ்பத்திரிகளுக்குப் போய் வருவதும் அவன் வாழ்க்கையின் ஓர் அம்சமாகியது.

சில சமயம் தன்னை கணேஷ், அல்லது வதனு, அல்லது ஸ்ரீகாந்த் என்று பெயரை மாற்றியும் கூறி வந்தான் கிளின்ட். அவனது ஆறாவது வயதில் வாடர் கலர் பெய்ன்டு செட் ஒன்றைப் பரிசாகப் பெற்றான். அதற்குப் பிறகுதான் இயற்கை எழில், சூரிய அஸ்தமனம், வண்ணத்துப் பூச்சி, பூக்கள் என்று கண்டது, கேட்டது அனைத்தையும் வண்ணங்களில் தீட்டலானான்.

ஒரு சமயம் ஓவியப் போட்டி பரிசளிப்பு விழாவிற்குப் பரிசு பெறத் தன் தந்தையுடன் சென்றான் கிளின்ட். அவனுக்குக் கூட்டமும், விழாவும் துளிக் கூடப் பிடிக்கவில்லை. பார்வையாளர்களுக்கு முதுகைக் காட்டி அமர்ந்துவிட்டு, தந்தையிடம் "நாம் வீட்டில் இருந்திருந்தால் இந்நேரம் நான் நிறையப் படங்கள் வரைந்திருப்பேன்" என்றான்.

நோய்முற்றியநிலையில் இருந்த மகனிடம் ஜோசப் "இத்தனை படம் வரைந்திருக்கிறாய்; எனக்காக ஒரு படம் வரைந்து கொடுக்கக் கூடாதா?" என்று கேட்க, உடனே கிளின்ட், ஒரு சோகமான முகத்தை கரங்கள் ஏந்தி இருப்பது போல் வரைந்து கொடுத்தான். அதை இப்போதும் ஜோசப் தம் பைபிளுக்குள் வைத்துப் பூஜித்து வருகிறார்.

தன் அருகில் வேதனையுடன் அமர்ந்திருந்த தாயிடம், "அம்மா, நான் தூங்கப் போகிறேன், என்னைக் கூப்பிடாதே, கூப்பிட்டால் எனக்குக் கேட்காது" என்றான் கிளின்ட். அவை தான் அவன் கடைசியாகக் கூறிய வார்த்தைகள்.

— ராஜி கிருஷ்ணமூர்த்தி



# மாண்புமிகு முதலமைச்சர்

சருக்கம்—25

## இரட்டைத் தாழ்ப்பாள்!

"சோழர் செல்வமே! இந்த அற்பமான ஜோதிக்காக வீரக்கண்கள் ஈரமாகலாமா?''

குலோத்துங்க சோழ மாமன்னன் சிவந்த கண்களுடன் அண்ணாந்து பார்க்கிறான்.

''ஜோதி!''

''உங்கள் உள்ளம் புரிகிறது மாமன்னா! ஆனால் தவறு உங்களுடையதுதான்!' ஜோதி! இந்த நாடகத்தைச் செவ்வனவே அரங்கேற்று! உன்னை ராஜ நர்த்தகியாக்கி அழகு பார்க்கிறேன்; ராஜ்யத்தில் உனக்குத் தேவையான வசதிகளைப் பெற்றுக் கொள்ளலாம்!'

கோவி. மணிசேகரன்



என்று சொன்னீர்களேயொழிய, 'நான் உன்னைக் காதலிக்கிறேன் ஜோதி!' என்று சொல்லவில்லை! அப்போது காதலும் அரும்ப வில்லை. காதல் எப்போது அரும்பும் என்பது அந்தக் காதலுக்கே தெரியாதே! போகட்டும்! கபாலீச்சுரனாக உருவெடுத்தீர்கள்; அப்போதும் என்ன சொன்னீர்கள்? 'நாம் காதலர்களைப் போல நடிப்போம்' என்றீர்களேயொழிய, 'நாம் காதலர்களாகவே மாறி விடுவோம்; நடிப்பிலும் இயல்பு தெரியும். நாடகமும் பூரணமாக அரங்கேறும்' என்று



சொல்லவில்லையே! இப்போது அதற்காகக் கண்ணீர் விட்டு என்ன பயன் சோழ பூபதி?''

குலோத்துங்கன் மௌனமானான்.

அவள் மீண்டும் கண்களைத் துடைத்துக் கொண்டே, ''காலம் தவறிப் பொழியும் மழைத்துளிகள் நமது கண்ணீர்த் துளிகள்! போகட்டும், பவானியின் கதையைச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''என் கதை போன்றுதான்! நீ எனக்கு இப்போது புத்தி சொல்லவில்லையா? அது போன்று வேறுவிதமான புத்திமதிகள் சேக்கிழார் சொல்லியனுப்பினாராம்.''

''சிவ, சிவ! நான் உங்களுக்குப் புத்தி சொல்வதாவது? அந்த அருகதையும் எனக்கு இருப்பதாவது? நிலைமாறிய காலங்களைத் தடுமாறிப் புலம்புகிறோம் என்று பொதுவில் தானே வைத்தேன்! பண்டித சோழரெங்கே? நொண்டியாகிய நானெங்கே?''

''காதலில் நொண்டியாகிவிட்டவள் என்று கூறுகிறாயா?''

''இல்லை; பரதக்கலையையே இன்னும் பூரணமாகப் பயிலாதவள். நான் கற்றது 'கால்' பாக அளவு!''

''ஆமாம், ஜோதி! கால்பாக அளவு! அதாவது உனது கால்களில் சிலம்பணியக் கூடிய பாகத்து அளவு!''

''பவானி கதையை முடியுங்கள்.''

''அவள் கதை முடிந்து விட்டது. அவள் இந்நேரம் பட்டீச்சுரம் போய்ச் சேர்ந்திருப்பாள்!''

''சக்கரவர்த்தி!''

''பவானி மனத்தில் பட்டதைச் சொன்னாள்; ஆனால் அதை அந்தத் தமிழ் ஏற்க வில்லை. தமிழாக இருந்தாலும் பரவாயில்லை; தேவமாத்தமிழ் ஆயிற்றே! எதற்காக இக்கதையைச் சொன்னேன்? உன்னை அவர் காதலிக்கவில்லை என்பதை உணர்த்துவதற்காக! பவானியிடம் சேக்கிழார் சொன்ன சொற்களை உன்னிடம் சொல்லவே இக்கதையை ஆரம்பித்தேன். அவர் பவானியிடம் என்ன கூறினார் தெரியுமா? ''எந்தச் சிவனுக்கும் பின்னால் ஒரு சக்தி இருந்தே இயக்குகிறாள்! நானோ... காமத்தை அழித்துக் கொண்டவன். சிவனை நோக்கி அது அழிந்துபடத் தவம் செய்பவன்! எனவே ஈஸ்வரனைப் பார்த்தான்; சிவநேயச் செல்வர்களை இவன் எழுத வேண்டுமே என்று தனது சக்தியை ஜோதி உரு தாங்கி அனுப்பி வைத்திருக்கிறான்! பவானி! நீ நினைப்பது போல ஜோதி என்னைக் காதலனாகவும் பார்க்கவில்லை; நானும் அவளைக் காதலியாகப் பார்க்கவில்லை. பெரிய புராணம் பாட என்னை இயக்குவிக்கும் ஒரு சக்தி அவள், அவ்வளவே!'' — சேக்கிழார் இவ்விதம் கூறவே, எழுந்து காலில் பணிந்து விடைபெற்றுக் கொண்டு நேரே என்னிடம் வந்தாள். பதவியை விட்டு விலகிக் கொள்வதாகச் சொன்னாள். நான் காரணம் கேட்க, முதலில் தயங்கினாலும் பிறகு மனம் விட்டுச் சொன்னாள். இதற்காகப் பதவியை விட்டு விலக வேண்டாம் என்று நான் எவ்வளவு

சொல்லியும் அவள் கேட்கவில்லை. பிறகு தான் வேறு வழியின்றிப் பட்டீச்சுரத்தையே அவள் காலம்வரை முற்றூட்டாக அனுபவித்துக் கொள்ள ஆணையிட்டேன். தங்கை கற்பகத்துடன் புறப்பட்டு விட்டாள்!

''ஜோதி! பவானியின் கதை முடிந்தது போல உனது கதையும் முடியக்கூடாது என்பதற்காகத்தான் நான் தொடங்கி வைக்க வந்திருக்கிறேன்!''

''இனி ஒரு புதிய தொடக்கமா?''

''ஆரம்பமே இனிமேல்தான்!''

''நம் காதலைப் பற்றிச் சொல்கிறீர்களா?''

''அது உன் விருப்பத்துக்கு விடப்பட்டது. எப்போதும் இந்தக் குலோத்துங்கனுடைய இதய வாசல் உனது வருகைக்காகக் காத்திருக்கும்! ஆனால் நான் சொல்ல வந்தது இதுவல்ல! இனிமேல்தான் நாம் கவனமாக நடிக்க வேண்டும்...''

''ஐயோ! மீண்டும் நடிப்பா?''

தலையை இறுகப் பற்றிக் கொண்டு சற்று அதிகமாகவே விசும்ப ஆரம்பித்து விட்டாள் அழகின் ஜோதி.

''ஜோதி! தேன் கூடு கட்டி வரும் நேரம்! தீப்பந்தத்தைக் காட்டி விடாதே! பிறகு அந்தத் தீப்பந்தமே இந்தக் குலோத்துங்கனின் கொள்ளியாகி முடியும்!''

''சோழேஸ்வரா!''

''சோழன் தேவை; சோழப் பேரரசு தேவை; அதன் பிற்காலச் சொப்பனங்கள் தேவையென்றால் பெரியபுராணம் உருவாகியே தீர வேண்டும்!''

''என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்! உலகத்துக்கு ஒரு மகாகாப்பியம் கிடைக்கிறது என்பதில் எனக்கும் சிறு பங்குண்டானால் எதையும் செய்கிறேன்!''

எதையும் என்பதில் இப்போது 'ம்'காரத்தை அழுத்தமாகவே உச்சரித்தாள் ஜோதி.

''நன்மையே செய்! உனது பங்கு சிறிதல்ல; மிகப் பெரிது! எனது பெயரைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் எடுத்து வைப்பாரோ என்னவோ; உனது பெயரை வாழ்த்திலேயே வைத்து வாழ்த்தி விட்டாரே!''

''நடக்க வேண்டியதைச் சொல்லுங்கள்!''

''நாம் இனிமேல்தான் நிஜமான காதலர்களாக மாற வேண்டும்!''

''சோழபூபதி!''

''நடிப்பில்!''

ஜோதியின் நெஞ்சைப் பெருமூச்சு அழுத்துகிறது; ஏன்? விழுங்குகிறது.

''மாறுவோம்! பூபதி! மாறுவோம்!''

சேக்கிழாரைத் தும்பளவும் மாசு தொட்டு விடக் கூடாது. குலோத்துங்கனே ஜோதி காதலிக்கிறான். எனவேதான் அவனது பெரிய புராண முயற்சிக்குத் துணை நிற்கிறான் என்று ஒட்டக்கூத்தர் பெருமான் முதல் சாமானியன் வரை அனைவரும் நினைக்க வேண்டும்! இதனால் உனக்கு எந்தச் சிறுமையும் கிடையாது. சக்கரவர்த்தியின் காதலியல்லவா? இதில் ஏமாற்றம் என்பது என்னோடு மட்டும் முடியும்கதை! அதுகுறித்து நான் இனி கவலைப்படுவதாகவுமில்லை. திருத்தொண்டர் புராணம் முடிந்ததும் உனது கதையை நீ எப்படி வேண்டுமானாலும் ஆரம்பித்துக் கொள்ளலாம்! சேக்கிழார் ஒரு சூரியன்! அந்தச் சூரியனைச் சூரியனாகவே பிரகாசிக்கச் செய்ய வேண்டும். அதற்காகவே மற்றவர் நம்பும்படியாக நாம் நடிக்கப் போகும் காதல் நாடகம் இது!''

கண்களில் மாலை மாலையாக நீரருவியைப் பெருகச் செய்த ஜோதி, அடுத்து இருகரம் கூப்பி: ''சோழர் திலகமே! சேக்கிழாருக்காகவும் அவர்தம் பெரிய புராண உதயத்துக்காகவும் எந்தத் தியாகத்தையும் மேற்கொள்வேன். சொன்னது சொன்னதுதான்! இது திருநாகேச்சுரர் மீதும் தில்லையம்பலவன் மீதும் சத்தியம்!''

அநபாயச் சோழன், அகம் குளிர ஜோதியின் தியாக நெஞ்சத்தை வணங்கி வாழ்த்துகிறான்.

**பொ**ழுதுவிடிந்தால் அனைவரும் தில்லை நோக்கிப் பயணமாக வேண்டும். நாளைய மறுநாள் திருவாதிரை நட்சத்திரம். மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார், முதன் முதலாக நாயன்மார்களைப் பற்றிப் பாட ஆரம்பிக்கப் போகிறார். அவர் குன்றத்தூரிலிருந்து புறப்பட்டு விட்டதையும் அறிந்து கொண்ட தம்பி பாலறாவாயன், மாமன்னனிடம் கூறி விட்டார்.

ஒட்டக்கூத்தர் பெருமான் கூட மலரியிலிருந்து திரும்பி விட்டார்.

தமது பெரிய புராணத் தொடக்கத்துக்கு, ஒட்டக்கூத்தர் வந்திருந்து வாழ்த்தியருள வேண்டுமென்று சேக்கிழார் அனுப்பியபணிவான ஓலை, கவிராட்சஸரின் உச்சியைக் குளிர வைத்து விட்டது.

ஒட்டக்கூத்தருக்குக் குலோத்துங்கன் — ஜோதி காதல், குன்றிலிட்ட விளக்கு போலத் தெரிந்துவிட்டதால், சேக்கிழாரின் சூரிய நெஞ்சை அவர் மதிக்கவே செய்தார்.

இதற்கிடையில்...

நாளைய புறப்பாட்டில் பட்டத்தரசி தியாகவல்லி தேவி புறப்பட மறுத்து விட்டாள். அவள் மறுக்கவே முக்கோக்கிழானடி தேவியும் சேர்ந்து மறுத்துவிட்டாள். தமக்கை செல்ல விழையாத விழாவுக்குத் தான் செல்வதாவது?

தியாகவல்லியின் நெஞ்சில் ஜோதி இப்போது பரம வைரியாகி விட்டாள். என்ன துணிவிருந்தால் சக்கரவர்த்தியைக் காதலிப்பாள்?

சோழச் சக்கரவர்த்தி குலோத்துங்கன் எவ்வளவோ பக்குவமாக எடுத்துச் சொன்னான். ஏற்பட்ட காதல் எதிர்பாராத விபத்து போன்றது என்று விளக்கினான். கேட்க வேண்டுமே தியாகவல்லி?

இரவு பூத்து ஏழரை நாழிகைகள் அதன் மணத்தில் கரைந்தன.

தியாகவல்லியைச் சமாதானம் செய்து நானே எப்படியும் அழைத்துச் செல்வது என்கிற முடிவுடன் அந்தப்புரம் நாடிச் சென்றுன் குலோத்துங்கன்.

மன்னன் வருகையறிந்து கொண்ட தியாகவல்லி, அறைக் கதவுக்குத் தாழ்ப்பாளிட்டுக் கொண்டாள்.

கதவை எவ்வளவோ தட்டிப் பார்க்கிறுன் குலோத்துங்கன். ம்ஹூம்...!

ஆசானை ஒட்டக்கூத்தரையனுப்பியாவது கவிதா நயமுடன் எடுத்துச் சொல்லிப் புறப்படுவதற்கு வழிதேடுகிறுன் குலோத்துங்கன். தடை ஏற்படக் கூடாதே!

மாமன்னன் தவிப்பைக் கண்ட வாணிதாசர் ஒட்டக்கூத்தர் அந்தப்புரம் நாடிச் சென்ருர். அறைக் கதவையடைந்தார்.

கதவோ தாழிடப்பட்டிருக்கிறது.

''சோழமாதேவி! ஒட்டக்கூத்தன் வந்திருக்கிறேன். கதவைத் திற!''

''......''

''கதவைத் திற தியாகவல்லி! நான் கூறும் கதை உனக்கு ஏற்புடையதாய் இருக்கும்!''

பதிலில்லை. அடம் சாதிக்கிறுள் அரசமாதேவி.* கவிதையால் மயக்கக் கவியே பாடுகிறுர்:

நானே இனிஉனை வேண்டுவது
இல்லை; நளினமலர்த்
தேனே கபாடம் திறந்திடுவாய்;
இறவா விடிலோ
வானோறு அனைய இரவி
குலாதிபன் வாயில் வந்தால்
தானே திறக்கும் நின்
கையிதழாகிய தாமரையே!

கவிதையின் இனிமை கண்ட தியாகவல்லி கனிந்த நெஞ்சோடு கதவருகே வந்தாளும்: ''கவிச்சக்கரவர்த்திப் பெருமானே! உங்கள் கவிதை நயத்துக்குக் கதவுக்குள்ளிருந்தே தலை வணங்குகிறேன்! பொருந்தா நிகழ்ச்சிக்காக — தேவையற்ற செய்திக்காக நீங்கள் வரலாமா? இந்தத் தவற்றை நீங்கள் செய்ததற்காக இரட்டைத் தாழ்ப்பாளிடுகிறேன்! இரவி குலாதிபன் வாயில் வந்தால் தானே திறக்கும் எனது கையிதழாகிய தாமரை யாவது? இந்தக் கையிதழ் ஏற்கெனவே அவர் எதிரில் முதல் தாழ்ப்பாளிட்டதை அறிய மாட்டீர்களோ? போய் வாருங்கள்.''

இந்த உட்பூசல் விவகாரத்தில் ஏன் தலையிட்டோமோ என்று வருந்தி, வந்த வழி நோக்கினுர் வாணிதாசர்!

இனி என்ன செய்ய முடியும்?

வந்தால் வரட்டும்! வரவில்லையென்றால் இருக்கின்றன எத்தனையோ சமாதானங்கள்!

மிதுன ராசியில் மிருகசீரிட நட்சத்திரம் மினிர, பொன் வண்ணச் சூரியன் கிழக்குத் திசையில் பூத்து மணக்கிறுன்.

சோழச் சக்கரவர்த்தி குலோத்துங்கன் தனது பரிவாரங்களுடன் தில்லை நகர் நோக்கிப் பயணப்படுகிறுன்.

பட்டத்தரசியும் இரண்டாம் தேவியும் புறப்பட மறுத்துவிட்டார்கள். தலைமைத் தோழிப் பெண் கோமளாவிடம் கவனித்துக் கொள்ள ஆணையிடுகிறுன் குலோத்துங்கன். மற்றபடி ஏனைய அமைச்சர்களும் மகாசேனுதிபதியும்தாம் தலைநகரில் இருக்கிறுர்களே!

சோழப் பரிவாரங்களுடன் ஜோதியும் முத்துப் பல்லக்கில் ஜெகஜ்ஜோதியாய்ப் புறப்பட்டதுதான் அரசமாதேவிகளின் எரிச்சலை அதிகப்படுத்தியது.

(தொடரும்)

* இப்பாடலைப் போன்று பல பாடல்கள் ஒட்டக்கூத்தர் பாடியதாகத் 'தனிப் பாடல் திரட்டு' என்கிற நூலில் இடம் பிடித்திருக்கின்றன. எல்லாவற்றையும் அவர் பாடியதாகச் சரித்திர ஞானமுள்ளோர் ஏற்க மறுப்பர். ஆயினும் இரட்டைத் தாழ்ப்பாள் நிகழ்ச்சி பிரசித்தமானதால் புது மெருகிட்டுக் கற்பனை செய்து சேர்த்திருக்கிறேன்.

# காமராஜர் மாவட்டத்தில் கல்கி



நமது நிருபர்கள் தற்போது காமராஜர் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து கல்கி வாசகர்கள் எழுதி அனுப்பிய பிரச்னைகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறுர்கள். கட்டுரைகள் அக்டோபர் கல்கி இதழ்களில் இடம் பெறும்.



# கல்யாண காரியத்துக்கு...

— நிவேதா

"ஏசமான்! ஒரு சின்ன விண்ணப்பம்," என்று மெதுவாய் ஆரம்பித்தான் முனியன்.

முனியன் இப்படி ஆரம்பிக்கிறான் என்றால், ஏதாவது பண விஷயமாகத்தான் இருக்கும் என்பது நன்றாய்த் தெரியும் சிவராமனுக்கு.

"என்னடா விஷயம்?" பிடி கொடுக்காதவர் போல் கேட்டார்.

"ஒண்ணுமில்லீங்க. இந்த வருசம் மழை நம்மளையெல்லாம் நல்லா ஏமாத்திப்புடுச்சுங்களே?"

"ஆமாம். அதுக்கென்னடா இப்போ? மழை உனக்கு மட்டுமாடா பெய்யாமப் போயிடுச்சு? ஊரு பூராத்தான் பெய்யலை. அதுக்காக ஊர் ஜனங்க மொத்தமும், தூக்குப் போட்டுக்கிட்டா செத்துப் போயிட்டாங்க? அதெல்லாம் அப்பிடித்தான் — ஒரு வருஷம் மழை பெய்யும், ஒரு வருஷம் ஏமாத்திடும். அந்தையெல்லாம் நினைச்சுக்கிட்டு அழுதுக்கிட்டு இருக்காதே. போயி நாலு இளநீர் கொண்டு வா," என்றார் சிவராமன்.

முனியன் உள்ளே ஓடினான்.

ஒவ்வொரு முறையும் சிவராமன் கிராமத்திற்கு வரும்போது, முனியன் தலையைச் சொறிந்து கொண்டு நிற்பதும், 'மழை பெய்யவில்லை,' என்றோ, 'விளைச்சல் சரியில்லை' என்றோ, 'மாடு செத்துப் போய் விட்டது' என்றோ சொல்லி தான் செலுத்த வேண்டிய வருடாந்திரக் குத்தகைப் பணத்தைக் குறைக்கச் சொல்லி வேண்டி நிற்பான்.

'இந்த முறை இவனிடம் பைசா ஏமாறக் கூடாது' என்று தீவிரமாக முடிவு செய்தார் சிவராமன்.

அரை மணியில் இளநீருடன் ஓடி வந்தான் முனியன்.

"சாப்பிடுங்க சாமி. நம்ம தோப்பு இளநிதாங்க. நல்லா ருசியா இருக்கும். அப்போ சொன்னேனுங்களே, இந்த வருஷம் மழை இல்லைன்னு... அதனால..." சொல்லிக் கொண்டே இன்னொரு இளநீரை வெட்டினான்.

"போதும்பா நிறுத்து. இந்த வருஷம் மழை இல்லை. குத்தகைப் பணத்தைத் தர முடியாதுன்னு சொல்ல வர்றே இல்லை! இங்க பாரு! என் கடைசிப் பொண்ணுக்குக் கல்யாணத்தை வெச்சிருக்கேன். நீ மழை பெய்யலை, வெய்யிலு அடிக்கலைன்னு சொல்லிக்கிட்டு இருந்தா காரியம் ஆகாது. புரியுதா? நீ என்ன பண்ணுவியோ, ஏது பண்ணுவியோ தெரியாது. ஒழுங்கா குத்தகைப் பணத்தைக் கொடுத்திடு. கல்யாணத்துக்கு நான் எப்படியும் முப்பதாயிரம் ரூபாய் சேர்த்தாகணும். என்ன பண்றதுன்னே புரியாமல் இருக்கேன். நீ ஏதும் சமாதானம் சொல்லி, குத்தகைப் பணத்தைக் கொடுக்காமல் இருந்திடாதே" என்றார் சிவராமன்.

முனியனின் முகம் ஏமாற்றத்தின் அறிகுறிகளைக் கோலமாய்ப் போட்டுக் காட்டியது.

"சரிங்க. நீங்க ஊருக்குப் போற

அன்னிக்கு நான் பணத்தோட வர்றேன்.''

இரட்டை மாட்டு வண்டி தயாராய் நின்றது.

சிவராமன் மாட்டு வண்டியில் மூன்று கிலோ மீட்டர்கள் போய், பிறகு ரயிலைப் பிடிக்க வேண்டும்.

அவசர அவசரமாய் ஓடிவந்தான் முனியன். அவனைத் தொடர்ந்து அவனது மனைவி செல்லாயி ஓடி வந்தாள்.

சிவராமன் அருகில் வந்து நின்ற இருவருக்கும் மூச்சிரைத்தது.

''எங்கே கிளம்பிட்டீங்களோன்னு பயந்து போயிட்டோம். அதான் வேகமா ஓடியாந்தோம். நல்லவேளை இருக்கீங்க.'' என்றபடியே தனது வேட்டியில் சுருட்டி வைத்திருந்த பணத்தை எடுத்துக் கொடுத்தான்.

''பத்தாயிரம் சாமி. எண்ணிப் பார்த்துக்குங்க.''

''எல்லாம் சரியா இருக்கும்டா. நான் வரட்டா?'' என்று பணத்தை எடுத்து, கைப்பையில் வைத்துக் கொண்டு கேட்டார்.

''எசமான். தப்பா நெனைக்கக் கூடாது. நீங்க விஷயத்தைச் சொன்ன பிறகு மனசு கேக்கலே. அதான்...'' இழுத்தான், முனியன்.

''என்னடா சொல்றே?''

''ஏ புள்ளே! எடுத்து ஐயா முன்னால வை,'' என்று மனைவியைப் பார்த்துச் சொல்ல, செல்லாயி தனது மடியிலிருந்து எடுத்துச் சிவராமன் உட்கார்ந்திருந்த திண்ணையில் வைத்தாள்.

அத்தனையும் நகைகள்!

''எதுக்குடா இதெல்லாம்? அதான் குத்தகைப் பணத்தைக் கொடுத்திட்டியே?'' கேட்டார் சிவராமன்.

''பட்டணத்தில இருக்கிறவங்க நீங்க. திருன்னு கல்யாணம் வெச்சிட்டீங்க. எவ்வளவு பணமிருந்தாலும் பத்தாது. அதான் இவள் போட்டிருந்த நகைகளையெல்லாம் கழற்றி எடுத்து வந்தேன். மறுக்காமல் வாங்கிக்கங்க. பொண்ணுக்குக் கல்யாணத்தை மொதல்ல முடிங்க. நகை விஷயத்தைப் பத்தி அப்புறமா பார்த்துக்கலாம். கிராமத்தில நாங்க கஞ்சியோ கூழோ குடிச்சுப்போம். பட்டணத்தில் முடியுங்களா? நல்ல காரியத்துக்கு உதவாத நகை எதுக்குங்க. எடுத்துப் போங்க'' என்றான் முனியன். அவன் கண்ணில் ஒருவித சந்தோஷம். தன்னாலும் உதவ முடிகிறதேயென்று.

பொட்டில் அடித்த மாதிரி இருந்தது சிவராமனுக்கு.

'கல்யாணம், கஷ்டம் என்றவுடனேயே உதவ வேண்டும் என்று முன் நிற்கிறானே — இந்த நல்ல உள்ளத்திடம் எப்படிப் பொய் சொல்லத் துணிந்தோம்?' சிவராமனின் மனத்தில் ஆயிரக்கணக்கான அம்புகள் தைத்தன.

''முனியா! என்னை மன்னிச்சுடு,'' என்றவர், தம் கைப்பையிலிருந்த பத்தாயிரம் ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்தார்.

முனியனும் அவனது மனைவியும் விவரம் புரியாமல் நின்றிருந்தார்கள்.

பாண்டியன் எக்ஸ்பிரஸ் சென்னை எழும்பூரில் வந்து நின்றது.

மூர்த்தி தன்னிடத்தை விட்டு எழுந்து அகலமாகக் கையை விரித்துத் தலைக்குமேல் கொண்டு போய், பெரிதாகச் சோம்பல் முறித்தான்.

ஆறு பேர் உறங்கக் கூடிய அந்தப் பகுதியில் அவன் மட்டுமே எஞ்சி இருந்தான். மற்ற ஐந்து பயணிகளும் தாம்பரத்தில் இறங்கிப் போய் விட்டனர்.

பக்கத்துப் பகுதியில் யாரோ பெரியவர் எச்சரித்துக் கொண்டு இருந்தார். "நன்றாகக் குனிந்து பாருங்கள்... ஏதாவது சாமான் விட்டுப் போய்விடப் போகிறது! கையால் துழாவிப் பாருங்கள்!"

மூர்த்தியிடம் அவன் தோளில் மாட்டியிருந்த பையைத் தவிர வேறு ஏதும் இல்லை ஒருநாள் பயணம்... மதுரை வரை போய் — இறந்து போன சித்தப்பாவைக் கரையேற்றித் திரும்ப — அதற்கு மேல எதற்கு?

தன்னிச்சையாக அவனும் இருக்கைக்கு அடியே குனிந்து பார்த்தான். கைக்குட்டை ஏதாவது தவறியிருந்தால்...?

கீழே ஒரு சிவப்பு ரெக்ஸின் பை — சிறியது. ஜிப் போட்டது. கிடந்தது.

தாம்பரத்தில் இறங்கிப் போன குடும்பத்தைச் சார்ந்தது அது. ஒரு ஆண் — நான்கு பெண்கள் அடங்கிய குடும்பம். செங்கல்பட்டு வருவதற்கு முன்பே எழுந்திருந்து முகம் கழுவிப் பொட்டிட்டுக் கொள்ள ஏக அமர்க்களம். தன் தூக்கம் கெட்டு விட்டது என மூர்த்தி முணுமுணுத்தான். அவர்கள் பெட்டிகளை மூடும் போது உள்ளே வைக்க மறந்து போயிருக்க வேண்டும். இருக்கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்ததைக் கவனிக்காமல் இறங்கியிருக்கிறார்கள்.

உள்ளே பிரித்துப் பார்த்தவனுக்கு ஒரே பிரமிப்பு. உள்ளே அழகாக அடுக்கப்பட்டு, ஒரு கட்டாகக் கட்டப்பட்ட நூறு ரூபாய் நோட்டுகள். எடுத்து எண்ணிப் பார்த்தான். மொத்தம் பன்னிரண்டாயிரம் ரூபாய். பையின் ஒரு பக்கம் சொந்தக்காரரின் பெயரும் விலாசமும் குறிக்கப்பட்டிருந்தது.

விருகம்பாக்கம் பக்கம் ஏதோ புதிதாகத் தோன்றிய நகரில் வீடு.



மூர்த்தி யோசிக்கவில்லை. அந்தச் சிறு பையைத் தன் தோளில் தொங்கிய கித்தான் பையில் திணித்துக் கொண்டான்.

திரும்பிப் பார்க்காமல்—விடுவிடுவென்று ரயில் நிலையத்தை விட்டு வெளியே வரும் வாயிலை நோக்கி நடந்தான்.

ஒரு பாண்ட்—ஒரு சட்டை மட்டும் இருந்த அந்தத் தோள் பை இப்போது கூடுதலாகக் கனத்தது. மூர்த்தியின் மனச்சுமையும் அதிகமாகியது.

பன்னிரண்டாயிரம் ரூபாய்.

தொலைத்தவர்களை நினைத்துப் பார்த்தான். பணக்காரர்களாகத் தெரியவில்லை. இரண்டாம் வகுப்பில்தானே வந்தார்கள்? இல்லாதவர்களாகவும் படவில்லை. திண்டுக்கல் நிலையத்தில் யோசிக்காமல் ஐம்பது ரூபாய்க்குப் பழம் வாங்கினார்களே... அந்தஸ்தில் அதிக அக்கறை காட்டும் ரெண்டுங்கெட்டான் நடுத்தரக் குடும்பமாக இருக்கும்.

மூர்த்திக்குத் தேவை இருந்தது.

இந்தப் பன்னிரண்டாயிரம் ரூபாயில் ஒரு ஸ்கூட்டர் வாங்கலாம். பாங்கில் அடகு வைக்கப்பட்டிருந்த புவனாவின் நகையை மீட்கலாம். ஏதாவது கம்பெனியில் மூன்று வருஷம் முதலீடு செய்தால் மாதம் வட்டி நூற்றைம்பது ரூபாய்க்குக் குறையாமல் வரும். பெரியவனுக்கு மூன்று மாதம் ஒரு முறை காலேஜ் ஃபீஸ் கட்ட கடன் வாங்க வேண்டியது வராது.

இருந்தும் மனத்தின் மூலையில் ஓர் உறுத்தல்; அவனுக்கும் திருடனுக்கும் என்ன வித்தியாசம்? திருடனும் மற்றவனின் கவனக் குறைவைத் தனக்கு ஆதாயமாக்கிக் கொள்பவன்தானே!

அவன் அதைக் கவனிக்காமல் இருந்திருந்தால்...? கவனித்து எடுக்காமல் விட்டிருந்தால்.. அந்தப் பை, பாண்டியன் எக்ஸ்பிரஸைத் துப்புரவு செய்பவர்கள் கையில் கிடைத்திருக்கும். அவர்கள் அத்தனை பேரும் சத்தியசந்தர்களா? கடவுளாகப் பார்த்து அவனிடம் தள்ளியிருக்கிறார். இல்லாவிட்டால் — இறங்க முயன்றவனைப் பக்கத்து இருக்கையில் இருந்தவர் குனிந்து பார்க்கும்படி தூண்டுவானேன்?

டிக்கெட் கலெக்டர் நீட்டிய கையைப் பார்த்துக் கூடப் பதறினான் மூர்த்தி. இத்தனை நேரம் அவர்கள் பை காணவில்லை என்பதைப் புரிந்து கொண்டு, 'போன்' செய்திருப்பார்களா? டிக்கெட் கலெக்டர் மௌனமாக டிக்கெட்டைப் பெற்றுக் கொண்டு வழி விட்டார்.

பை காணாமல் போனதை வீட்டுக்குப் போய்த்தான் கவனிப்பார்கள். நிச்சயம் இவன் மேல் சந்தேகப்படுவார்கள். படட்டுமே... இவனை நிச்சயமாகக் கண்டுபிடிக்க முடியாது. சித்தப்பா என்ன நோட்டீஸ் கொடுத்து விட்டா செத்துப் போனார்? பாண்டியனில் கடைசி நிமிஷத்தில் தற்செயலாகத்தான் ஸீட் கிடைத்தது. இவன் விலாசம் யாருக்கும் தெரியாது... இவனைத் தேடி வர...

திடீரென்று நேருக்கு நேர் சந்தித்து விட்டால்...? ஒன்றுமே தெரியாது எனச் சாதித்து விட வேண்டியதுதான். முடியுமா? பன்னிரண்டு ஆயிரம் என்றால் சும்மாவா? — முடியத்தான் வேண்டும்.

ரயில்வே ஸ்டேஷன் வாசலில் தயங்கி நின்றான் மூர்த்தி. வீட்டிற்குள் போனால் சின்னவள் சாயா பையை உடனே குடைவாள்... அவளுக்காக வாங்கிய கால் கிலோ நாகப்பட்டினம் அல்வா அந்தப் பையில் இருந்தது.

இல்லை... புவனாவே அந்தப் பையைப் பார்த்துப் பிரித்து பணம் ஏது என்று கேட்டால் என்ன சொல்வது? யாரிடம் வேண்டுமானாலும் மறைத்துப் பேசலாம்... வக்கீலின் பெண் — வக்கீலுக்குப் படிக்காவிட்டால் கூடத் தொண தொணத்து உண்மையை வரவழைத்து விடுவாள்.

அவன் செய்தது சரி என்று நிச்சயம் ஒப்பமாட்டாள். கீரைக்காரி தன்னிடம் பத்து பைசா அதிகம் தந்துவிட்டாள் என்பதற்காக மறுநாள் காலை வாயிற்படியில் தவமிருந்து திருப்பிக் கொடுத்தவள் ஆயிற்றே!

நேராக ஆபீஸ் போய்விட்டால்? அது எப்படி சாத்தியம்? குளித்து உடை மாற்றிக் கொள்ள வேண்டாமா? அவன் கை முகவாய்க் கட்டையைத் தடவியது. இரண்டு



ஜானகி

நான் 'விஷேச்சல்' கோரையாகக் குத்தியது— அவன் மனத்தைப் போல!

எதிரிலிருந்த ஹோட்டலில் காப்பி மட்டும் சாப்பிட்டான். அவன் முகத்தைப் பார்த்த சர்வர் பில்லை மட்டும் நீட்டினான். 'டிப்ஸ்'க்காகக் காத்திருக்கவில்லை.

பத்து ரூபாயையும் பில்லையும் கல்லாவில் நீட்டினான். நான்கு இரண்டு ரூபாய் நோட்டுக்களும் சில்லறையும் தந்தார்கள். சில்லறையை மணி பர்ஸில் போடும்போது நோட்டுகள் கீழே நழுவிப் பறந்தன.

அவைகளில் மூன்றைக் குனிந்து தேடி எடுத்தான். நான்காவது நோட்டு மின் விசிறிக் காற்றில் பறந்து — ஹோட்டல் வாசலில் ஒரு பக்கமாகக் காலணிகளுக்குப் 'பாலிஷ்' போட்டுக் கொண்டிருந்த பையன் மேல் உட்கார்ந்தது.

அந்த நோட்டைக் கையில் எடுத்தவன் பின்னாலேயே வந்த மூர்த்தியை ஏறிட்டுப் பார்த்தான்.

பத்து வயது கூட நிரம்பாத பையன். அழுக்கடைந்த டிராயர். சட்டையில் ஏக ஒட்டுகள். எண்ணெய் காணாத தலை. செம்பட்டைவிட்டு இருந்தது. அந்தப் பையன் உட்கார்ந்தபடியே நோட்டை நீட்டினான். அப்போதுதான் மூர்த்தி கவனித்தான் — இளம் பிள்ளை வாதம் வந்து இரண்டு கால்களும் முடமாகிப் போயிருந்தன.

மூர்த்திக்கு இரக்கம் பிறந்தது. "நீயே வச்சுக்க தம்பி!" என்றான். பன்னிரண்டாயிரத்தில் இரண்டு ரூபாய் தர்மம் செய்யக் கூடாதா?

அந்தப் பையன், "சும்மாப் பிடி. ஒன் பணம் எனக்கு எதுக்கய்யா...? நான் பூரா பாலிஷ் போட்டா எட்டு ரூபா கிடைக்கும். அதுலே நாஸ்தா துன்னாதான் எனக்கு செரிக்கும்... இந்தக் காலைக் காட்டிக் கையை விரிச்சாக் கூடத் துட்டு கிடைக்கும். ஒன் மாதிரி நாலு பேரு ஐயோ பாவம்னு போடுவாங்க. அது ஒரு பொழைப்பா ஐயா... மானம் கெட்ட ஜீவனம்,... உழைச்சுச் சம்பாதிக்கணும்... உன் செருப்புக்குப் பாலிஷ் போட்டுவிட்டு இந்தப் பணத்தை வாங்கிக்கிடலாம். ஆனால் நீ போட்டிருக்கிறது ரப்பர் செருப்பு... உம்... பிடி நோட்டை..." என்றான்.

மூர்த்தி பிரமித்துப் போய் நின்றான். சிறுவன் ஒரு கும்பிடு போட்டுவிட்டுப் பணத்தைப் பையில் போட்டுக் கொள்வான் என எதிர்பார்த்தால் எப்படிப் பொரிந்து தள்ளிவிட்டான்!

ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாக விருகம்பாக்கம் செல்லும் பஸ்ஸைப் பிடிக்க பஸ் ஸ்டாப் நோக்கி நடந்தான்.

மனம் ஏனோ ரொம்பவும் லேசாகியிருந்தது!




V.V.D
குருவிகள் பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவை பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை..
செல்லமாய் வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்
அக்கூந்தலுக்கு
வி.வி.டி. தேங்காய் எண்ணெய்...
VVD-10/86


V.V.D
COCONUT OIL
MICRO FILTERED PURE
MADE IN INDIA
வி.வி.டி. தேங்காய் எண்ணெய்
இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்
V.V.D

## ஆயுர்வேதத்தின் வாயிலாகப் புற்று நோய்க்குச் சிகிச்சை



மக்கள் புற்று நோய் என்பது மிகப் பயங்கரமான நோய், உயிரையே குடித்துவிடும் என்பார்கள். ஆனால் ஆயுர்வேத நிபுணர் டாக்டர் எம். பாபுராவ் இந்த அறிக்கையை மறுத்துள்ளதோடு, அது பொய் என்றும் நிரூபித்துக் காட்டியுள்ளார். நோயாளிகளுக்கு விடிவு காலம் உண்டு என்று நிரூபித்துள்ளார்.

எனது தந்தை ஸ்ரீ வீரமல்லா கொட், வாய் புற்று நோய்க்காக டாக்டர் பாபுராவால் சிகிச்சை செய்யப் பட்டார். பன்னிரண்டு வாரங்களுக்குள் அவர் புற்று நோயை குணப்படுத்தியதோடு, அந்நோயின் அறிகுறியே தெரியாதபடி செய்துவிட்டார்.

நான் டாக்டர் பாபுராவுக்கு மிகுந்த கடமைப் பட்டிருப்பதோடு எனது குடும்ப அங்கத்தினர்களும் தங்கள் நன்றியறிதலே இந்த இனிய சேவைக்காகத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

வி. அமரகுமார்,
வீடு நெ. 1–8–271,
சிக்கட்பள்ளி,
ஹைதராபாத் 20.
500 020.

| விலாசம் | போன் நெம் | பார்க்கும் கிழமை |
|---|---|---|
| டாக்டர் எம். பாபு ராவ்<br>கான்சர் இன்பர்மரி (ஆபீஸ்)<br>1–1–27 1/3, சிக்கட்பள்ளி<br>ஹைதராபாத்–500 020 | 64735 | பிரதி வியாழன் & வெள்ளி |
| C/o. ஹோட்டல் கதாரா,<br>உஸ்மான் ரோடு, தி. நகர்,<br>சென்னை–600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம்.ஜி. ரோடு,<br>பெங்களூர்–560 001. | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் கே.கே. இண்டர் நேஷனல்<br>தெற்கு ரயில் நிலையம் எதிரில்<br>எர்ணாகுளம், கொச்சின்–682 016. | 366010<br>366040 | பிரதி திங்கள் |
| C/o. ஹோட்டல் நட்ராஜ்,<br>பகட்கன் ஜ்<br>இம்பீரியல் தியேட்டர் அருகில்<br>புது தில்லி–110 055 | 322699 | பிரதி செவ்வாய் |
| C/o. ஹோட்டல் மிட்–டௌன்,<br>அந்தேரி ரயில்வே எதிரில்,<br>ஸ்டேஷன் (மேற்கு), பம்பாய். | 628882 | பிரதி புதன் |



## பெண்ணாடம்:

# ஒன்றுமில்லாத ஊரில் ஓஹோவென்ற வளர்ச்சி!

ஒன்றுமே இல்லாத ஊரில் ஒரு தொழிற்சாலை தொடங்கினால், அந்த ஊருக்கே வசதிகள் வந்துவிடுகின்றன. பள்ளிகள் நிறுவப்படுகின்றன... சாலைகள் அமைக்கப்படுகின்றன...

தென் ஆர்க்காட்டிலுள்ள பெண்ணாடம் ஒரு காலத்தில் அப்படி இருந்த ஊர்தான். அதை மாற்றி அமைக்கக் காரணமாயிருந்த அருணா சர்க்கரை ஆலையின் தலைவர் திரு மருதைப்பிள்ளை அவர்களைச் சந்தித்த போது இன்றைய சர்க்கரை ஆலைகளின் உற்பத்தித் திறன், நாட்டின் தொழில் வளர்ச்சி — இவை பற்றிப் பேசினார்.

பேட்டியின் சுருக்கம்:

**வெளிநாட்டிலிருந்து சர்க்கரை இறக்குமதியை நிறுத்திவிடப் போவதாக மத்திய அரசு அறிவித்திருக்கிறதே. உள்நாட்டு உற்பத்தியை மட்டுமே வைத்துக் கொண்டு தேவைகளைச் சமாளிக்க முடியுமா?**

நம் உள்நாட்டுத் தேவை, ஆண்டுக்கு 85 லட்சம் டன்கள். இதை நாம் எட்டுகிற வரை இறக்குமதியை அறவே நிறுத்திவிட முடியாது. இந்த ஆண்டு 70 லட்சம் டன் உற்பத்தி செய்திருக்கிறோம். சென்ற வருடத்துக் கையிருப்பில் கொஞ்சம் மீதி இருப்பதால் இந்த ஆண்டு மட்டும் இறக்குமதியை நிறுத்தப் போவதாக அமைச்சர் அறிவித்திருக்கிறார். அடுத்த ஆண்டு உள்நாட்டு உற்பத்தி போதவில்லை என்றால் மறுபடி இறக்குமதிதான்! ஆனால் அந்நியச் செலாவணி குறைந்த அளவே நம்மிடம் இருக்கிற போது, சர்க்கரை இறக்குமதியில் நிதியமைச்சகத்துக்கு இஷ்டமே இல்லை.

**கூட்டுறவுத் துறையில் சர்க்கரை ஆலைகளைத் திறக்க, தமிழ்நாடு அரசு உதவப் போகிறதாமே?**

ஆமாம். தனியார் துறையிலும் கூட்டுறவுத் துறையிலும் புதிய சர்க்கரை ஆலைகளை இப்போது ஆரம்பிப்பது சாத்தியம்தான். ஆனால் மத்திய அரசாங்கம், சர்க்கரை பற்றிய முழுமையான ஒரு கொள்கையை இன்னும் முடிவெடுத்து அறிவிக்கவில்லையே? ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ், ஒரு கோடி டன் சர்க்கரை உற்பத்தி குறியீட்டளவாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. புதிய சர்க்கரை ஆலைகள் துவக்கப்பட்டால், இந்த இலக்கை நிச்சயம் எட்டிவிடுவோம். மற்ற மாநிலங்களைப் பார்க்கும் போது, தமிழ்நாட்டில் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் சிறப்பாக இயங்கி வருகின்றன.

**இப்போதைய பிரதமர் — நிதியமைச்சர் ஜோடி எப்படி? பொருளாதாரத் துறையில் நாடு முன்னேற இந்த இருவரும் உதவுவார்கள் என்ற நம்பிக்கை தோன்றுகிறதா?**

நிச்சயமாக! இப்போதே தொழில் வட்டாரங்களில் உற்சாகமான சூழ்நிலை நிலவுகிறது. நிதியமைச்சரும் அவ்வப்போது தொழிலதிபர்களுடனும், சேம்பர் ஆஃப் காமர்ஸ் தலைவர்களுடனும், மனம் விட்டுப் பேசுகிறார். நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்த என்ன

செய்யலாம் என்று விவாதிக்கிருர்.

அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் தலைவன் என்ற முறையில் நானே இந்த மாதிரி பத்துக் கூட்டங்களில் கலந்து கொண்டிருக்கிறேன். இவைகளால் நிச்சயம் பலன் இருக்கிறது. எங்களைப் பொறுத்தவரை நிதியமைச்சர் ஒரு நண்பர் போலத்தான் நடந்து கொள்கிருர். உள்நாட்டுத் தேவைக்கான உற்பத்தி தவிர, ஏற்றுமதியிலும் அக்கறை காட்டுகிருர். சிவப்பு நாடாக்களை உதறித் தள்ளி, 'பேப்பர் ஒர்க்'கைக் குறைப்பதில் வியாபாரத் துறைப் பிரதிநிதிகளுடன் தீவிரமாக ஒத்துழைக்கிருர். இந்த நிதியமைச்சர் இருக்கும் வரை, உபயோகமில்லாத வேலைகள், குறைக்கப்பட்டு, அதனுல் மிச்சமாகும் நேரம் உபயோகமாகச் செலவழிக்கப்படும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

***அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத் தலைவர் என்ற முறையில் நீங்கள் என்னென்ன செய்திருக்கிறீர்கள்?***

உற்பத்தியாளர்கள் எல்லோரும் ஒன்று கூடி, எங்களைப் பாதிக்கும் பிரச்னைகள் பற்றி இப்போது கருத்தரங்குகள் நடத்தி வருகிறோம். வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்களின் முதலீடு பற்றி சென்னையில் சமீபத்தில் ஒரு கருத்தரங்கும், கலால் வரி பற்றி தில்லியில் ஒரு கருத்தரங்கும் நடத்தினேம். நிதியமைச்சர் இதற்கு வந்திருந்து மூன்று மணி நேரமும் தீவிரமாகக் கருத்துக்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். சிறு தொழில்கள் வளர்ச்சி பற்றித் தொழில் அமைச்சர் என். டி. திவாரி தலைமையில் ஒரு கருத்தரங்கு தில்லியில் நடத்தினேம். 'இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு உள்படப் பல துறைகளில் ஆக்கபூர்வமான யோசனைகளைக் கொடுத்திருக்கிறோம்.

***சர்க்கரை ஆலை நிறுவ வேண்டும் என்று ஏன் உங்களுக்குத் தோன்றியது?***

நான் இலங்கையில் ஒரு வியாபாரக் குடும்பத்தைச் சேர்ந்தவன். இந்தியாவில் முதல் முதலாக கோதுமை மாவு போன்றவற்றை வியாபாரம் செய்து வந்தோம். அப்போது தொழில் துறையில் எனக்கு நிறைய நண்பர்கள் கிடைத்தார்கள். அதன் காரணமாக, ஒரு நவீன மாவு மில்லையே நிறுவினுல் என்ன என்று தோன்றியது எனக்கு. அது மிக வெற்றிகரமாகச் செயல்பட்ட போது, அப்போது இங்கே தொழிலமைச்சராக இருந்த — தற்போதைய துணை ஜனுதிபதி — ஆர்.வெங்கட்ராமன், "சர்க்கரை ஆலை துவங்குங்கள். நாட்டுக்கு அவசியம் தேவையானது. தொழில் அமைச்சர் என்ற முறையில் எல்லா உதவிகளையும் செய்கிறேன்!" என்ருர். அந்த ராசியானவரின் ஆசியுடன் துவங்கப்பட்டது தான் பெண்ணுடம் சர்க்கரை ஆலை.

***தமிழ்நாட்டில் தொழில் வளர்ச்சிக்கு உகந்த சூழ்நிலை நிலவுகிறதா?***

உகந்த நிலைமை நிலவுகிறது. தொழில் அமைச்சர் ராஜாராம் தமிழகத்தில் நிறைய தொழில்கள் துவங்கப் பேராவலுடன் இருக்கிருர். ஆனுலும் தொழில் துவங்குவதற்கான ஆக்கமான சூழ்நிலை தோன்ற வேண்டும். காமராஜ் — வெங்கட்ராமன் காலத்தில் இருந்த ஆர்வமும், ஊக்கமும், விரைந்து செயல்படும் உத்வேகமும் மீண்டும் வரவேண்டும். தொழில் அதிபர்களின் பிரச்னைகளை அனுதாபத்துடனும் அவசரமாகவும் கவனிக்கும் நிலைமை தோன்ற வேண்டும்.

***உங்கள் தொழில் துறையை இன்னும் விரிவுபடுத்தும் எண்ணம் இருக்கிறதா?***

ஆம். லீஸிங் கம்பெனி ஒன்று துவங்கியுள்ளோம். சென்னை நகரில் மூன்று நட்சத்திர ஹோட்டல் துவங்குவதற்கான பணிகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. இராணிப்பேட்டையில் ஓர் ஆலம் (**Ferric alum**) தயாரிக்கும் தொழிற்சாலையைத் துவங்கியுள்ளோம்.

★

கரும்பு உற்பத்தியிலும், வெற்றிகரமான ஆலைப் பராமரிப்பிலும், டாக்டர் என். மகாலிங்கம் பரிசு; திரு. எஸ். வி. பார்த்தசாரதி பரிசு என்று அடுக்கடுக்காகப் பரிசுகள் வாங்கியிருக்கும் அருணு சர்க்கரை ஆலை, புதிய முயற்சிகளிலும் சாதனைகள் படைக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது நமக்கு. காரணம்:

இருபது வருடங்களுக்கு முன் சுமார் ஒரு லட்சம் டன் கரும்பைப் பிழிந்த நிறுவனம் இன்று ஏழரை லட்சம் டன் கரும்பு பிழிகிறது! கரும்புக்குப் பட்டுவாடா செய்யப்பட்ட பணம் முதல் வருடம் ரூ. 65/— லட்சம். இந்த வருடம் ரூ. 26 கோடி. அகில இந்தியாவில் உள்ள 355 ஆலைகளில் பெரிய பத்து ஆலைகளில் ஒன்ருக விளங்குகிறது. 1985—86 ஆம் ஆண்டில் நிறைய கரும்பைப் பிழிந்ததில் தென்னகத்திலேயே முதலிடம் வகிக்கிறது.

துவக்கத்தில் நாலு லட்ச ரூபாய் சம்பள பட்டுவாடா, இன்று ஒன்றரைக் கோடிக்கு மேல்!

ஊழியர்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம்; பன்னிரண்டாயிரத்துக்கு மேற்பட்ட கரும்பு உற்பத்தியாளர்களின் வாழ்க்கைத் தர உயர்வு; ஆயிரம் பேருக்கு நேரடி வேலை; இன்னொரு ஆயிரம் பேருக்கு அதைச் சார்ந்த மறைமுக வேலை வாய்ப்புகள் — என்று அருணு சர்க்கரை ஆலை வெற்றிகரமாகச் செயல்படுகிறது. 1968 இல் ஒரு வங்கி கூட இல்லாத பெண்ணுடத்தில், இன்று பத்து வங்கிகள்! வளத்துக்கும், வளர்ச்சிக்கும் இவைதானே சான்றுகள்?

பேட்டி:

**சாருகேசி**

# கனவுக்குள் படுத்துறங்கும் தேசம்!



கனவுக்குள்
பாய்விரித்துப் படுத்துறங்கும்
தேசம் இது!

வாழ்க்கையின் வாசலில்
'நாடு' என்னும்வார்த்தையே
உடைந்து கிடக்கிறது.
'பற்று'
அகராதிக்குள் திரும்பி
அழுதபடி கிடக்கிறது!

பஞ்சதந்திரக் காட்டில்
நரிகளே
இப்போது கிடையாது.
எல்லாம்

சட்டமன்றத்திற்கும்
நாடாளுமன்றத்திற்கும்
தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டன.
நரிநாயகத்தின்
புனைபெயர் — ஜனநாயகம்.

கண்ணபிரான்கள்
துரியோதனர்களுக்குத்
தேரோட்டப் போய்
விட்டனர்.

கீதைக்குக் கிடைக்கும்
'ராயல்டி'யைவிட,
துரியோதனனிடம்
அடிப்படைச் சம்பளம்
அகவிலைப்படிகள் அதிகம்!

இங்கே
தருமத்தின் வாழ்வுதனைச்
சூது கவ்வும் —
மறுபடியும் சூது
கவ்வும் முன் — தருமம்
மண்டையைப் போட்டு
விடும்!

குருக்ஷேத்திரக்
குருதி அலைகளில்
அர்ச்சுன வில்லும்
அறத்தின் பிணமும்
மிதக்கும்!

நல்ல தேசமடா இது!

இமயம் முதல்
குமரி வரை, பாமரப்பூக்கள்.
அவற்றின்மேல்
அரசியல் ஈக்கள்.
அவை
இழைக்கும் இரத்த அடைகள்
இந்திரபுரிகளின்
தங்கக் கோப்பைகளில்
பிழியப்படுகின்றன.

பிச்சையாய்
ஓரிரு துளிகள் உதட்டில்
பட்டதும்
பாவலர் புகழும்
பச்சைப் பாக்கள்!

விரக்திவிரல்களால்—எனது
பாட்டு வீணை — இப்படிப்
பதறவில்லை...
வேதனை எனது
மூச்சைச் சுடுகிறது...
கோபம் எனது
பூபாளங்கள் மேல்
கொப்புளம் போடுகிறது!

இனி,
தாயம் போட்டு — இந்தக்
காய்களை
நகர்த்த முடியாது!
காயம்
போட்டுத்தான் நகர்த்த
முடியும்!
நகர்த்தலாம் வாருங்கள்!

தமிழன்பன்




# ராஜாஜி - காமராஜ் பலப்பரீட்சை

④

**செ**ன்னை சட்டசபைக்குள் மீண்டும் நுழைய ஸி. ஆர். தயாராக இருந்தார். கருத்து வேறுபாடு காரணமாக 1942ல் காங்கிரஸிலிருந்து அவர் ராஜினாமா செய்திருந்த போதிலும் தம்மை ஒரு காங்கிரஸ்காரராகவே அவர் எப்போதும் எண்ணி வந்தார். ஸி. ஆரிடமிருந்து ஒரு கடிதம் கிடைக்கப் 'பெற்றதும் ஆஸாத் அவரை மீண்டும் காங்கிரஸில் சேர்த்துக் கொண்டார். 'கடந்த 3—4 ஆண்டுகளாக ஸி. ஆரின் போக்கு குறித்து என்னைவிட அதிகமாக யாரும் வருந்தியிருக்க முடியாது' என்றார் பட்டேல். ஆனால் ஸி. ஆரின் திறமைகளைப் பயன்படுத்திக் கொள்வதில் அவர் குறியாக இருந்தார். மத்திய சட்டசபையில் ஸி. ஆர். இடம் பெற்று அங்கு காங்கிரஸ் கட்சிக்குத் தலைமை தாங்குவார் என்றுகூட அவர் எதிர்பார்த்தார். ஆனால் ஸி. ஆரின் மனம் சென்னை மாகாணத்தில்தான் இருக்கிறது என்பதைச் சீக்கிரமே கண்டு கொண்டார்.

ஆனால் மாகாணத்தின் மனம் என்னவாக இருந்தது? 1937—39ல் ஸி.ஆர். சென்னை மாகாணப் பிரதமராக இருந்தபோது தட்டிக் கேட்பவர் இல்லை என்னுமளவுக்கு ஜொலித்தார். ஆனால் அதைத் தொடர்ந்து, 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் குறித்து அவரது நிலையும், பாகிஸ்தான் பற்றிய அவரது கருத்தும் அவரைத் தனிமைப்படுத்திவிட்டன. இவை பற்றிய தமது கருத்துக்களில் அவர் உறுதியாக இருந்தார்; வருந்தவோ விட்டுக் கொடுக்கவோ இல்லை. இதனால் பெரும்பாலான காங்கிரஸ்காரர்களால் அவரை ஏற்க முடியவில்லை. அரியலூரில் நடந்த விடுதலை பெற்ற காங்கிரஸ் வீரர்கள் மாநாட்டில், ''வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் பங்கு பெறுதவர்களைக் காங்கிரஸில் சேர அனுமதிக்கக் கூடாது'' என்ற தீர்மானம் 670 க்கு 4 என்ற வோட்டு எண்ணிக்கையில் நிறைவேறியது! மகாத்மா, ஆஜாத், பட்டேல் போன்றவர்களுக்கு நடந்ததை மறந்து எதிர்காலம் பற்றிச் சிந்திப்பது சாத்தியமாக இருந்தது. ஆனால் ஜில்லா, தாலுகா, நகரம், கிராமம், ஆகிய கீழ்மட்ட காங்கிரஸ் ஊழியர்களில் ஏராளமான பேர் ஆகஸ்டு இயக்கத்தில் கைதாகி இரண்டு மூன்று ஆண்டுகள் சிறையில் இருந்துவிட்டு, சமீபத்தில்தான் விடுதலை பெற்று வந்திருந்தார்கள். அதே இயக்கத்தில் சேராமல் தனித்திருந்த ஸி. ஆரின் போக்கை மறக்கவோ, மன்னிக்கவோ அவர்கள் தயாராக இல்லை.

ராஜாஜிக்கு இணையான வேறு ஒருவரைக் கண்டுபிடிப்பதும் சிரமமாக இருந்தது. பிரகாசம் தெலுங்கு ஜில்லாக்களில் ரொம்பப் பிரசித்தமாக இருந்தார். ஆனால் அதற்கு வெளியே அவர் புகழ் பரவவில்லை. சத்தியமூர்த்தியோ காலமாகிவிட்டார். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக 1940லிருந்துபதவிவகித்துவந்தார்காமராஜ். பிராமணர் அல்ல, ஆகஸ்டு இயக்கத்தில்

பங்கேற்றவர் என்ற இருவித அனுகூலங்கள் அவருக்கு இருந்தன. தவிர, காங்கிரஸ் ஊழியர்களைக் கவர்கின்ற சக்தியும் இருந்தது. கிராமம் கிராமமாகச் சுற்றுவதில் அலுப்பு சலிப்பே உணர மாட்டார். ஆனால் மந்திரி பதவி வகிப்பதில் அவர் இதுவரை தன்னம்பிக்கை காட்டவில்லை. ஆந்திரப் பகுதிகளில் அறிமுகமற்றவராகவே விளங்கினார். நிகர விளைவு என்னவென்றால் சென்னை மாகாணத்தில் சிலரும் மத்தியில் உயர் மட்டத் தலைவர்களும் சென்னை மாகாண காங்கிரஸ்காரர்களை ஸி. ஆரையே ஏற்குமாறு வற்புறுத்தினார்கள். காங்கிரஸின் சட்டமன்ற வேட்பாளர் தேர்வுக் குழுவின் தலைவர் என்ற முறையில் பட்டேல், 'பட்டதாரிகள் தொகுதியில் ஸி. ஆர். மீண்டும் போட்டியிடலாம்' என்று கூறினார். மேலும், ஸி. ஆருக்கு அனுகூலமும் ஆதரவும் பெருகவேண்டும் என்பதற்காக, அவரால் நியமிக்கப்பட்ட மூவரும் காமராஜ் உள்பட காமராஜால் நியமிக்கப்பட்ட ஐவரும், காங்கிரஸ் வேட்பாளர்களைத் தமிழ் ஜில்லாக்களில் தேர்ந்தெடுப்பார்கள் என்று முடிவு செய்யப்பட்டது. இந்தப் பட்டியலை பட்டேலும் அவரது குழுவினரும் இறுதிப் பரிசீலனை செய்து தேவையான மாறுதல்களுடன் அங்கீகரிப்பார்கள்.

ராஜாஜி—காமராஜ் உறவுகளில் சுமுகமான போக்கு நிலவும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அரசியல் ரீதியாக மட்டுமின்றித் தனிப்பட்ட முறையிலும் இருவருக்குமிடையே நிறைய வேற்றுமைகள் இருந்தன. காமராஜ் ராஜாஜியைவிட 25 வயது இளையவர்; பிரும்மச்சாரி. அவருக்கு ராஜாஜி பொறுமையற்றவராகவும், புதிராகவும் பேச்சிலும் நடத்தையிலும் நயமற்றவராகவும் தோன்றினார். ஸி. ஆருக்கோ காமராஜர், தேவையற்ற மௌனம் சாதித்துக் கணக்குப் போடுகிறவராகக் காணப்பட்டார். புதிதாக வந்த அரசியல் எஜமானனின் கர்வத்தைக் காமராஜர் ராஜாஜிக்கு உணர்த்தினார் எனில் ஜாதி காரணமாகவும், படிப்பறிவு காரணமாகவும் உருவான கர்வத்தை ராஜாஜியிடம் கண்டார் காமராஜ். ஸி. ஆர். என்ற ரயில் இஞ்சினுடன் தமது ரயில் பெட்டியை இணைக்கக் காமராஜ் விரும்பவில்லை. அந்த ரயில் இஞ்சின் பளபளத்தது; வேகமாக ஓடவும் செய்தது; ஆனால் புரிந்துகொள்ள முடியாத, ஆபத்தான பாதைகளில் சென்றது! காமராஜின் விசுவாசத்தைப் பெறுவதற்காக ஸி. ஆர். தமது திறமைகளைக் குறைத்துக் கொண்டு அடங்கிப் போகவும் தயாராக இல்லை. ஆகக் கூடி இருவரும் ஒருவரை ஒருவர் அனுசரித்துப் போவது என்பது இயலாத காரியமாக இருந்தது.

எனவே, வேட்பாளர் தேர்வுக் குழுவின் பணியில் சந்தேகங்களும் சச்சரவுகளும் தலையிட்டன. பின்னால் தலைமைப் பதவிக்கான தேர்தல் நடக்குமானால், ஸி. ஆருக்கு எதிராக வோட்டு அளிக்கக் கூடியவர்கள் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்படுவதாக ஸி. ஆரால் நியமிக்கப்பட்ட குழு அங்கத்தினர்கள் கருதினார்கள். என்றாலும் ஸி. ஆர். வேட்பாளர் தேர்வுப் பணியைப் பூர்த்தி செய்யவே விரும்பினார். ஆனால் அவர் பதவி மோகம் கொண்டு செயல்படுவதாகப் பழி சுமத்தப்பட்டபோது அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இந்த துஷ்பிரசாரம், வெகு சாமர்த்தியமாகக் கதை போல் பரப்பப்பட்டது. ஹிந்தி பிரசார சபையின் வெள்ளி விழாவுக்காக காந்தி வந்திருந்தார். இந்த நிகழ்ச்சி காங்கிரஸ் தலைவர்கள் விடுவிக்கப்படும் முன்னரே, தேர்தல்கள் பற்றி யாரும் சிந்தித்தே பாராத நாளிலேயே தீர்மானிக்கப்பட்ட ஒன்று. ஆனால் காந்தியை ஸி. ஆர். தான் வற்புறுத்தி அழைத்து வந்தார் என்றும் ஸி. ஆரை மாகாணப் பிரதமர் பதவியில் அமர்த்துவதற்காகவே காந்தி வரவழைக்கப்பட்டார் என்றும் கதைகள் பின்னப்பட்டன.

இதனால் மனமுடைந்து போன ஸி. ஆர். தாம் தேர்தலுக்கு நிற்கப் போவதில்லை என்று அறிக்கை விட்டார்! காந்திக்கு அவர் எழுதினார்:

"இந்த அவதூறுகளைத் தாங்க எனக்கு இனி சக்தியில்லை. இத்தனை நாட்களாக எத்தனையோ சுமந்து விட்டேன். அவதூறுகளைப் பரப்புகிறவர்களை லட்சியம் செய்யாமல் செயல்பட எவ்வளவோ போராடி வந்திருக்கிறேன். ஆனால் இப்போது விட்டுக் கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்.

"என்னை யாரும் தப்பர்த்தம் செய்து கொள்ளக் கூடாதே என்று என் மனம் ஏங்குகிறது. நான் அதிகார ஆசை கொண்டிருப்பதாகச் சிலர் நினைக்க நான் ஏன் அனுமதிக்க வேண்டும்? அதுவும் அது உண்மையே அல்லாத போது? இதை நான் நிரூபித்தாக வேண்டும். அப்படி நிரூபிக்கும் போது, 'நிரூபித்து விட்டேன்' என்பது தவிர வேறு ஒரு நன்மையும் விளையாது என்றாலும் நான் நிரூபித்தாக வேண்டும்!"

ஸி. ஆருடைய திடீர்ப் போக்கு அவரது நண்பர்களை அதிர்ச்சியில் ஆழ்த்தியது. பட்டேல் ஒளிவு மறைவின்றித் தமது கருத்தை வெளியிட்டார்:

"எங்கே இப்படி நடந்து கொண்டு விடுவீர்களோ என்றுதான் நான் ஆரம்பத்திலிருந்தே பயந்து கொண்டிருந்தேன். உங்கள் நண்பர்களுக்கு எவ்வளவு அநீதி இழைக்கிறீர்கள், எவ்வளவு நியாயமற்ற முறையில் நடந்து கொள்கிறீர்கள் என்பதையே நீங்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. உங்களுக்காக நாங்கள் இவ்வளவு சிரமப்பட்ட பிறகு எங்களை நீங்கள் கைவிட்டு விட்டீர்கள்! இப்படி நீங்கள் நடந்து கொண்டால் உங்களை யார்தான் ஆதரிக்க முடியும்? எங்களைக் கலந்தாலோசிக்கக் கூட இல்லையே! இப்படித்தானே உங்கள் வாழ்நாள் முழுதும் நடந்து கொண்டு வந்திருக்கிறீர்கள்!"

ஆனால் 'ஸி. ஆரும் சென்னை சட்டசபையும்' என்ற கதை இத்துடன் முடியவில்லை! தேர்தலுக்குப் பின்னும் தொடர்ந்தது!

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

தென்னாற்காடு கலெக்டர் ஆர். சி. பண்டா.



# "குறைகளைச் சுட்டிக் காட்டும் உங்களுக்கு நன்றி சொல்கிறேன்!"

— தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் பேட்டி

"நண்பர்களே! கல்கி பத்திரிகை மேற்கொண்டுள்ள 'மாதம் ஒரு மாவட்டம்' சமுதாயப் பணி பற்றி நீங்கள் அனைவரும் அறிவீர்கள். நம்மிடமும் கேள்விகள் கேட்கப் போகிறார்கள். அந்தக் கேள்விகளெல்லாமே, ஆங்காங்கே உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டுவதாகத்தான் இருக்கும்! அதனாலேயே நம்மில் யாரும் மனவருத்தப்பட்டு விடக் கூடாது. இதுவரையிலும் நமக்குத் தெரியாத பல இருட்டுப் பகுதிகளை, இப்போது கல்கி மூலமாகவாவது தெரிந்து கொள்ள நமக்கொரு வாய்ப்புக்கிடைத்ததே என்று நாமெல்லாம் சந்தோஷப்பட வேண்டும்!" என்று கூறினார் தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் ஆர். சி. பண்டா. மாவட்டம் முழுவதிலுமிருந்து, நமது பேட்டிக்காக (கலெக்டர் சார்பில், செய்தி மற்றும் மக்கள் தொடர்புத் துறை அலுவலர் கிருஷ்ணனால்) வரவழைக்கப்பட்டுக் குழுமியிருந்த முப்பத்திரண்டு ஆபீஸர்களையும் பார்த்துத்தான் இவ்வாறு கூறினார் கலெக்டர் ஆர். சி. பண்டா.

பல மணி நேரம் நீடித்தது பேட்டி. சென்ற இரு இதழ்களில் எழுதப்பட்ட பல விஷயங்கள் கலெக்டர் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டன. அவற்றைக் கவனித்து நடவடிக்கை எடுப்பதாகக் கூறினார் கலெக்டர். செப்டம்பர் '14, 21 இதழ்களில் கட்டுரை வடிவம் பெறாத சில பிரச்னைகளைப் பற்றிய கேள்விகளும் கலெக்டரின் பதில்களும் இங்கு இடம்பெறுகின்றன. தவிர கட்டுரை வடிவம் பெற்ற பிரச்னைகளில் கலெக்டர் புதிய கோணத்தில் சொன்ன கருத்துக்களையும் இங்கு தருகிறோம்:

கல்கி: விழுப்புரம் முனிசிபல் சேர்மென் சண்முகஉடையாரைச் சந்தித்தபோது, விழுப்புரம் நகராட்சி மூலம் கட்டப்பட்டுள்ள சத்துணவுக் கூடங்கள் ஒவ்வொன்றுக்கும் நாற்பதாயிரம் ரூபாய் செலவானதாகக் கணக்கெழுதப்பட்டுள்ளது. ஆனால் உண்மையில் அது ஒவ்வொன்றும் நானூறு ரூபாய்க்குக் கூட பெறுமானமாகாது என்கிறாரே!

கலெக்டர்: அவர் சொல்வது உண்மையாக இருந்தால், லோகல் ஆடிட் மூலம் தவறு செய்தவர்களை அவரே கண்டுபிடிக்கலாமே!

கல்கி: பெருமுக்கலில் எண்பத்து மூன்று ஹரிஜனக் குடிசைகள் இருக்கின்றன, எப்படி? நல்ல இடம் கிடைக்காததால் பாறை இடுக்குகளிலெல்லாம் குடிசைகளைப் போட்டிருக்கிறார்கள். அருகிலுள்ள கீழ் அருங்குணம், குருவம்மா பேட்டை, விட்டிலாபுரம் போன்ற கிராமங்களிலெல்லாம் ஹரிஜனங்களுக்காக அரசே வீட்டுமனைகளை விலைக்கு வாங்கிக் கொடுத்திருக்கிறது. இவர்களுக்கும் ஏன் கொடுக்கக் கூடாது?

கலெக்டர்: தேவைகளுக்குத் தகுந்தபடி வரிசைக்கிரமமாகக் கொடுத்துக் கொண்டுதான் வருகிறோம். நடைமுறை வேலைகளெல்லாம் முடிந்து வீட்டுமனைப் பட்டாக் கொடுப்

பதற்குச் சுமார் இரண்டாண்டு காலமாவது பிடிக்கிறது. நிச்சயம் அவர்களுக்கும் கொடுக்கப்படும்.

கல்கி: விழுப்புரத்திலுள்ள சுமார் இருநூறு சலவைத் தொழிலாளர் குடும்பங்களுக்கு விட்டுமனை இல்லை. அதனால் விழுப்புரம் அருகிலுள்ள பாணாம்பட்டு கிராம எல்லையில் — அலிச்சம்பாளையம் போகும் பாதை அருகில் இருக்கும் சுமார் பதினைந்து ஏக்கர் புறம்போக்கு நிலத்தில் தரலாம். இப்போது அந்தப் புறம்போக்கு நிலத்தை மனை ஒன்று ஆயிரத்து முந்நூறு வீதம் ஒருவர் சட்டவிரோதமாக விற்றுக் கொண்டிருக்கிறார். அப்படி அவர் எஸ். டி. பழனி என்பவருக்கு விற்றதற்கான ஆதாரம்தான் இந்த ஜெராக்ஸ் காப்பி! (கலெக்டரிடம் தருகிறோம்) நீங்கள் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கலெக்டர்: உடனடியாக விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட பெருமை பெற்ற திருவெண்ணெய்நல்லூர்க் கோயில் பராமரிப்பு இல்லாமல் படுமோசமான நிலையில் இருக்கிறது...

கலெக்டர்: கோயில் பராமரிப்புக்காகத் தலா ஐயாயிரம் வீதம்' அறுபது கோயில்களுக்கு அரசு மானியம் வழங்கியிருக்கிறது.. மேலும் அரசைக் கேட்டிருக்கிறோம். அதன் மூலம் பராமரிக்க முடியும் என்று நம்புகிறோம். மேலும் என், எஸ். எஸ். மூலம் கோயில்களைச் சுத்தப்படுத்த ஆவன செய்கிறோம்.

கல்கி: திருப்பாச்சனூரில், மலட்டாற்றின் ஒரு கரையில் சிறிது தூரத்திற்குப் பதினைந்து லட்சம் செலவில் கரையைப் பலப்படுத்துகிறார்கள். ஆனால் இக்கரையில் ஏற்கெனவே சுமார் இரண்டு கி. மீ. தூரத்திற்கு உடைந்து போயிருக்கும் கரையைக் கண்டு கொள்ளவே இல்லை. இதனால், வெள்ளம் வரும்போது திருப்பாச்சனூர், தென்குச்சிப்பாளையம், சேர்ந்தனூர், அரசமங்கலம், ஆனைகவுண்டன் குச்சிப்பாளையம், தளவானூர் போன்ற கிராமங்களிலுள்ள சுமார் பத்தாயிரம் ஏக்கர் நிலம் பாதிக்கப்படும். அதோடு, ஒரு கரையை மட்டும் பலப்படுத்தினால், மறுகரைப் பக்கம் ஏற்படும் வெள்ளச் சேதம் மேலும் மோசமாகிவிடுமல்லவா?

கலெக்டர்: முன்னுரிமையின் அடிப்படையில்தான் அந்த வேலை நடக்கிறது. எப்படியிருந்தாலும் நிலைமையை நேரில் சென்று கண்டறிகிறேன்.

கல்கி: திருப்பாச்சனூரில் மலட்டாற்றில் ஒரு தரைப் பாலம் அமைத்தால், அந்தப் பகுதி மக்கள் ஏழு கி. மீ. யிலேயே விழுப்புரத்தை அடைய முடியும். பாலமில்லாததால் இப்போது இருபத்து நான்கு கி. மீ. சுற்றிக் கொண்டு செல்கிறார்கள்.

கலெக்டர்: மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் இத்திட்டம் சேர்க்கப்பட்டு நிதி ஒதுக்கீட்டுக்காகக் காத்திருக்கிறது.

கல்கி: நெய்வேலி — இரண்டாவது நிலக்கரிச் சுரங்கத்தால் பாதிக்கப்பட்டு இடம் பெயர்ந்து, இப்போது உளுந்தூர்ப் பேட்டை அருகிலுள்ள புதிய அஜீஸ் நகரில் குடியேறியுள்ள சிலருக்கு வாக்குறுதியளிக்கப்பட்டபடி நிலம் ஒதுக்கப்படவில்லை; முந்நூற்று அறுபத்து நான்கு பேருக்கு வேலைக்கான தகுதியிருந்தும் முப்பத்தேழு பேருக்கு மட்டும்தான் என். எல். சி. யில் வேலை கொடுக்கப்பட்டுள்ளது என்கிறார்களே?

கலெக்டர்: சிலர் சென்னை போன்ற வெளியூர்களில் செட்டிலாகி விட்ட பிறகும் இங்கே நிலம் கேட்கிறார்கள். அதுதான் பிரச்னை. மற்றும் என். எல். சி. யில் வேலைக்கான காலியிடங்கள் வரும்போதெல்லாம் வரிசைப்படி அவர்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுக்கப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. மேலும் அவர்களுக்காகக் கூட்டுறவு முறையில் நெசவு, தச்சுக் கூடங்களையெல்லாம் கட்டிக் கொடுத்தோம். ஆனால்,

* கலெக்டர் பேட்டியின்போது உடனிருந்த அலுவலர்களில் ஒரு பகுதியினர்.



அவர்கள் அதிலெல்லாம் ஆர்வம் காட்ட வில்லை என்பதுதான் துரதிர்ஷ்டம். அவர்களில் குறிப்பிட்ட யாராவது மிகவும் பாதிக்கப்பட்டிருந்தால் சொல்லுங்கள்; ஏதாவது செய்ய முயற்சி செய்கிறேன்.

கல்கி: லீலாதேவி என்ற பட்டதாரிப் பெண்; மற்றும் ஊனமுற்ற இளைஞரைக் காதலித்துக் கலப்பு மணம் செய்து கொண்ட சுமதி என்ற பட்டதாரிப் பெண். வேலையில்லாமல் திண்டாடும் இவர்களுக்கு உடனடியாக ஏதாவது செய்தால் உதவிகரமாய் இருக்குமென்று நம்புகிறோம்.

கலெக்டர்: (குறித்துக் கொள்கிறார்).

கல்கி: ஸ்ரீமாவோ — சாஸ்திரி ஒப்பந்தத்தின் பேரில் தாயகம் திரும்பிய இலங்கை அகதிகளுக்கு நெய்வேலியில் அறுநூறு வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன. இப்போது அவற்றைப் பார்த்த போது ஒவ்வொரு குடியிருப்புச் சுவர்களும் பாளம் பாளமாக வெடித்துக் காணப்படுகின்றன. மேலும் அவர்களுக்காக நடத்தப்பட்ட அரசு விவசாயப் பண்ணையும் மூடப்பட்டுவிட்டது. இதற்கெல்லாம் என்ன காரணம்?

கலெக்டர்: அவர்களுடைய குடியிருப்புக்களில் ஏற்பட்டுள்ள வெடிப்புக்களுக்குச் சரியான பராமரிப்பில்லாதது காரணமா. அல்லது கட்டப்பட்ட கலவையால் ஏற்பட்டதோ என்பதை ஆராய்கிறேன். விவசாயப்பண்ணை மூடப்பட்டதற்கு அரசு காரணமல்ல. கூட்டுறவு முறையில் அவர்களையே நடத்தச் சொன்னோம். அவர்கள்தான் நடத்தவில்லை. இந்தவிஷயத்தில் அவர்கள் அரசைக் குறை சொல்வது சரியல்ல.

கல்கி: விருத்தாசலத்திலுள்ள சார்பு மற்றும் உரிமையியல் நீதிமன்றத்தில் வக்கீல்கள் கூடத் தாராளமாக உட்கார முடியாது. அந்த அளவுக்கு இடநெருக்கடி!

கலெக்டர்: செஞ்சியில் கூட அப்படியொரு நிலைதான் இருந்தது. கேட்டார்கள். நல்ல இடம் கொடுத்திருக்கிறோம். விருத்தாசலம் கோர்ட்டிலிருந்து கட்டடம் கேட்டு எதுவும் வரவில்லை. வந்தால் ஆவன செய்வோம்.

கல்கி: திட்டக்குடி அருகிலுள்ள கொடிகளம் கிராமத்தில் சுமார் முந்நூறு வீடுகளைக் கொண்ட ஹரிஜனக் காலனிக்குச் சரியான சுடுகாடு வசதி கூட இல்லை. அமுதம் அங்காடிகளில் அவர்களுக்குச் சரியானபடி பொருள்கள் கிடைப்பதில்லை என்கிறார்கள்.

கலெக்டர்: முதலில் சுடுகாட்டுப் பிரச்னையை எடுத்துக் கொள்வோம். வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் குடியிருப்பதற்கான இடம் ஒதுக்குவது பற்றித்தான் இப்போது தீவிரமாக இருக்கிறோம். இந்தப் பிரச்னை தீர்ந்த பிறகுதான் இறந்தவர்களுக்கு இடம் ஒதுக்குவது பற்றி யோசிக்க முடியும். எனவே சுடுகாட்டில் இருக்கிற சிறிதளவு இடத்தைத்தான் இப்போதைக்கு அவர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்; வேறு வழியில்லை. அமுதம் அங்காடிகளைப் பொறுத்த வரை 'முதலில் வந்தவர்களுக்கு முதலில்' என்னும் கொள்கைதான்.

கல்கி: ஆரம்பத்தில் 1,446 மில்லியன் கன அடியாக இருந்த வீராணம் ஏரியின் கொள்ளளவு, தூர் எடுக்காததால், இப்போது 987 மில்லியன் கன அடியாகக் குறைந்து போயிருக்கிறது. கொள்ளளவு குறைந்து விட்டதால் ஆண்டுதோறும் ஏற்படும் வெள்ளச் சேதம் அதிகமாக இருக்கிறது. தூர் எடுத்து, வெள்ளச் சேதத்தைத் தடுத்து விட்டால் வெள்ள நிவாரணப் பணிகளுக்குச் செலவிடும் பணம் மிச்சமாகுமல்லவா?

கலெக்டர்: வீராணம் ஏரியை முழுவதுமாகத் தூர் எடுக்க வேண்டுமானால் அறுபது கோடி ரூபாய் செலவாகும். அந்த அளவுக்கு நிதி வசதி இல்லை. அதனால் ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தின் மூலம் வாய்க்கால்களைத் தூர் எடுக்கும் சில்லறை வேலைகளைச் செய்து கொண்டுதானிருக்கிறோம். இந்த ஆண்டு கூட குமராட்சி, கீரப்பாளையம், பரங்கிப் பேட்டை போன்ற பகுதிகளில் உள்ள சுமார் நூற்றிருபது கி. மீ. தூர வாய்க்கால்களைத் தூர் எடுத்திருக்கிறோம்.

கல்கி: பெரும்பாலும் மழைத் தண்ணீரைச் சேமிப்பதற்கான வசதிகள் இல்லாததால் தான் அதிக அளவு வெள்ளச் சேதம் ஏற்படுகிறது. சேமிப்பதற்கான வழி வகைகளைச் செய்தால் வெள்ளச்சேதம் பெருமளவு குறைந்து விடும். ஆனால், 'நமது அதிகாரிகளிடம்தான் எந்தவிதமான திட்டங்களும் இல்லை. எனவே இதற்கெல்லாம் அதிகாரிகள்தான் முழுப் பொறுப்பு!' என்று ஒருமுறை வெள்ளச்சேதத்தைப் பார்வையிடுவதற்காகத் தமிழகம் வந்திருந்த ராஜீவ் காந்தியே அதிகாரிகளைக் குற்றம் சாட்டியதாக வி. வி. சாமிநாதன் எங்களிடம் சொன்னார்!

கலெக்டர்: மாண்புமிகு பிரதமரும் மாண்புமிகு அமைச்சரும் என்ன பேசிக் கொண்டார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால், வீராணம் ஏரியைத் தூர் எடுக்கும் திட்டம் பற்றி அரசுக்கு எழுதியிருக்கிறோம். அங்குதான் தாமதமாகிறது. நிதி ஒதுக்கினால் வேலை உடனே நடக்கும்.

கல்கி: சிதம்பரத்திலிருக்கும் அண்ணா கலையரங்கம், இப்போது பெரியார் போக்குவரத்துக் கழகமாக மாறியிருப்பதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: அண்ணா கலையரங்கம் அப்படியேதான் இருக்கிறது. ஆண்டுக்கு ஒரு முறையோ, இருமுறையோதான் அண்ணா கலையரங்கத்தில் நிகழ்ச்சிகள் நடக்கின்றன. மற்ற நாட்களில் சும்மா கிடப்பானேன் என்று அதன் ஒரு பகுதி பெரியார் போக்குவரத்துக் கழகத்திற்குக் குத்தகைக்கு விடப்பட்டுள்ளது. அவ்வளவே!

கல்கி: சுற்றுலா மையமாக்கப்பட்டிருக்

கும் பிச்சாவரத்தில் கடுமையான குடிநீர்ப் பிரச்னை. மேலும் அங்கே டூரிஸ்ட்டுகளை நீண்ட நேரம் தங்க வைப்பதற்கான அம்சங்கள் எதுவும் இல்லையே?

கலெக்டர்: குடிநீர்ப் பிரச்னை இருப்பது உண்மைதான். அதற்காக, அங்குள்ள கடல் நீரையே குடிநீராக்கும் திட்டம் வைத்திருக்கிறோம். அதை நிறைவேற்றி விட்டால், கடல் நீர் எப்படிக் குடிநீர் ஆகிறது என்பதைப் பார்க்கவும் டூரிஸ்ட்டுகள் கவர்ந்திழுக்கப் படுவார்களல்லவா!

கல்கி: வி. வி. சாமிநாதனோடு பேசிக் கொண்டிருந்த போது, "பிச்சாவரத்தில் சுரபுன்னை போன்ற உலகத்திலேயே அரிதான மரங்களும், மருத்துவச் செடிகளும் இருக்கின்றன. சுரபுன்னை போன்ற மரங்கள், மனிதர்களைப் போல வாழக் கூடிய மரங்கள்; உணர்ச்சி பூர்வமான மரங்கள். ஆகவே, அங்கு மனித நடமாட்டம் அதிகமானால் அம்மரங்கள் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அவ்வளவு ஏன்? மோட்டார் படகின் சப்தம் கூட அம்மரங்களைப் பாதிக்கும்! எனவே அதைச் சுற்றுலா மையமாக்குவது கூடாது!' என்று பிரெஞ்சு விஞ்ஞானி ஒருவர் சொன்னார். ஆனாலும் அதையெல்லாம் மீறித்தான் அதைச் சுற்றுலா மையமாக்கியிருக்கிறோம்!" என்றார் அவர். அப்படியானால் பிச்சாவரம் ஒரு சுற்றுலா மையமாக்கப்பட்டதில், அடிப்படையே தவறு என்று ஆகிறதே?

கலெக்டர்: பிரெஞ்சு விஞ்ஞானி சொன்னது பற்றி எனக்கொன்றும் தெரியாது. அது சுற்றுலா மையமாக்கப்பட்ட பிறகு பலமுறை நான் சென்றிருக்கிறேன். சுரபுன்னைக் கன்றுகள் புதிது புதிதாக வளர்ந்து கொண்டு தான் இருக்கின்றன.

கல்கி: கடலூர்ப் பகுதியான திருப்பாதிரிப் புலியூரிலுள்ள ராஜம் நகரில் A. S. No. 4 இன் கிளையாக ஒரு சாராயக் கடை இயங்கிக் கொண்டிருக்கிறது. ஒரு சாராயக்-கடைக்குக் கிளைக் கடை வைக்கக் கூடாதே என்று விசாரித்த போது, எல்லாம் 'சம்திங்' கொடுத்துத் தான் என்றார்கள்!

கலெக்டர்: உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன்.

: கல்கி: கல்வராயன் மலையிலுள்ள கொடமாத்தி என்ற மலைவாழ் மக்கள் கிராமத்திற்குச் சென்றிருந்தோம். அங்கு ஜெனரேட்டர் மூலம் எரியும் தெரு விளக்குகளெல்லாம் இருக்கின்றன. ஆனால், ஜெனரேட்டர்தான் இல்லை. அது ரிப்பேராகி கடந்த ஒரு வருட காலமாக வெள்ளிமலையிலுள்ள பி.டி.ஓ. ஆபீஸில் கிடப்பதாகச் சொன்னார்கள்.

கலெக்டர்: ஜெனரேட்டர்களைப் பழுது பார்க்கும் இடங்களே மிகக் குறைவு. அதனால் தான் தாமதம். விரைவில் சரிசெய்யப் பட்டுவிடும். சில மலைக் கிராமங்களில் 'சோலார்' விளக்குகளை போட்டிருக்கிறோம். ஜாகீர்கள் காலத்தில் அவர்கள் அடிமைகளாய் இருந்ததைவிட இப்போது மிகவும்



"தற்போதைய தமிழ் எழுத்தாளர்களுக்கு உதவற மாதிரி ஒரு புத்தகம் எழுதியிருக்கேன்!"

"புத்தகத்தோட பெயர் என்னங்க?"

"சிறுகதைகளை நாவலாக்குவது எப்படி?"

— மணியம் தர்மலிங்கம்

முன்னேறியிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

கல்கி: அதே கிராமத்தில் மாணிக்கம் என்ற பார்வையற்ற சிறுவன். அவனுக்கு ஒரு சிறு ஆபரேஷன் செய்தால் பார்வை வந்துவிடுமாம். ஆனாலும் ஆண்டொன்றுக்குச் சுமார் நானூறு ரூபாய் கூட வருமானமில்லா அவன் தந்தையால் எப்படிச் செய்ய முடியும்? நீங்கள் ஏதாவது செய்ய முடியுமா?

கலெக்டர்: உடனடியாக அந்தச் சிறுவனை அழைத்து வந்து கடலூரிலிருக்கும் விழியிழந்தோர் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைக்கிறேன். ஆபரேஷனுக்கும் ஏற்பாடு செய்கிறேன்.

கல்கி: கள்ளக்குறிச்சி தாலுகாவிலுள்ள ஜகினிருப்பம் என்ற கிராமத்தில், ஒட்டர் என்னும் ஜாதியைச் சேர்ந்த முப்பது குடும்பத்தினர், ஊர் அருகிலுள்ள மலையடிவாரப் பகுதியில், சுமார் அறுபது ஏக்கர் நிலத்தைச் சமன்படுத்திக் கடந்த ஐம்பது ஆண்டுகளாகப் பயிரிட்டு அனுபவித்து வருகிறார்கள். அவ்வப்போது வந்த அதிகாரிகள் அவர்களுக்குப் பட்டா வாங்கித் தருவதாகச் சொல்லி 'சம்திங்' வாங்கினார்களே தவிர, பட்டா வாங்கித் தரவில்லையாம்! இப்போது அந்த நிலம் வனத்துறையில் சேர்க்கப்பட்டு விட்டதாம். நீங்கள் ஏதாவது செய்ய முடியுமா?

கலெக்டர்: விசாரித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: பண்ருட்டியிலுள்ள தாசில்தார் ஆபீஸில் ஜாதிச் சான்றிதழ் வாங்கிய ஒருவர், ஆரம்பத்தில் முப்பது ரூபாய் என்று சொல்லப்பட்டதைக் கடைசியில் பதினைந்து ரூபாய்க்குப் பேரம் பேசி வாங்கிய தமது சொந்த அனுபவத்தை எங்களுக்கு எழுதியிருக்கிறார்!

கலெக்டர்: விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன். ஜாதிச் சான்றிதழ் வாங்குவதற்கு ஒவ்வொருமுறையும்தாசில்தார் ஆபீஸுக்கே செல்ல வேண்டிய அவசியமில்லை. ஒரு பள்ளித் தலைமையாசிரியரிடம் வாங்கினாலே போதும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்கி: விருத்தாசலத்திற்கு அருகிலுள்ளது மாடு வெட்டி மங்களம் என்ற ஊர். அந்த ஊர் அம்மனுக்கு ஆண்டுதோறும் பதினான்கு மாடுகளை வெட்டிப் பலி கொடுப்பதால் தான் அந்த ஊருக்கு அப்படியொரு பெயரே வந்ததாம். இப்போதும் அந்த பலி நடந்து கொண்டுதான் இருக்கிறதாம்!

கலெக்டர்: அந்தச் சமயத்தில் எங்களுக்கு அவ்வூர் மக்களில் யாராவது தகவல் கொடுத்தால் உடனடியாகச் சென்று நடவடிக்கை எடுக்கத் தயாராய் இருக்கிறோம்.

கல்கி: சிதம்பரம் அருகிலுள்ள கி. ஆடூர் என்ற கிராமத்திலுள்ள குளங்களைச் சில தனியார்கள் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்களாம். அவர்கள் மேல் நடவடிக்கை எடுக்கும்படி கடந்த 20.7.85 அன்று உங்களுக்கே ஒரு மனு அனுப்பியும் பயனில்லை என்கிறார் அந்த ஊரப் பஞ்சாயத்துத் துணைத் தலைவர் நடன சபேசன்.

கலெக்டர்: இதுபற்றிக் கொஞ்சம்விளக்கம் சொல்லவிரும்புகிறேன். அந்தக் குளங்களைத் தனியார்கள் ஆக்கிரமித்த போது இந்தத் துணைத் தலைவரும், மற்றவர்களும் எங்கே போயிருந்தார்கள்? அப்போதே அவர்களைத் தடுத்திருக்கலாமே! அந்த அளவுக்காவது மக்களுக்கு விழிப்புணர்ச்சி வர வேண்டாமா?

கல்கி: அப்படிச் செய்தால் சில சமயங்களில், 'சட்டங்களைப் பொதுமக்களே கையில் எடுத்துக் கொள்வதா? எங்களிடமல்லவா முறையிட வேண்டும்?' என்று நீங்களே திருப்பிச் சொல்லுவீர்கள்!

கலெக்டர்: தடுத்து நிறுத்துவது என்றால் அடிதடி கலவரம் மூலமாக அல்ல; சாத்வீக முறையில் செய்யலாமில்லையா? அதைத்தான் சொன்னேன்!

கல்கி: சின்னக் கங்கணங்குப்பத்திலிருந்து குமந்தான் மேடு வரையுள்ள சுமார் ஒரு கி. மீ. சாலையை இப்போது காணவில்லையாம்! அந்த அளவுக்கு அது மோசமாக இருக்கிறது. அது நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலையால் பராமரிக்கப்பட்டது. முன்பு அவ்வழியாக அந்த ஆலைக்குக் கரும்புகள் வந்ததால் ஆலையே பராமரித்தது. இப்போது வருவதில்லை என்பதால் விட்டுவிட்டதாம். நீங்கள் ஏதாவது செய்யக் கூடாதா?

கலெக்டர்: முன்னுரிமைப்படி ஆங்காங்கே சாலை வசதிகளைச் செய்து கொண்டுதானிருக்கிறோம். விசாரித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: விழுப்புரத்திற்கு அருகிலுள்ள மாம்பழப்பட்டு கிராமத்தில் பெரியார் போக்குவரத்துக் கழக ஊழியர்களுக்கு வீடு கட்டுவதற்காக சென்ட் ஒன்றுக்கு ரூ. 170 தருவதாக எழுத்து மூலம் வாக்குறுதி கொடுத்ததாம் போக்குவரத்துக் கழகம். பிறகு இரண்

டாண்டுகள் கழித்து அந்த இடமே வேண்டா மென்று சொல்லிவிட்டதாம். அதனால் தங்களுக்கு இரண்டாண்டு மகசூல் நஷ்டம் என்கிறார்கள் அம்மக்கள்!

கலெக்டர்: அவர்கள் இரண்டாண்டுகளாகப் பயிரிடாமல் இருந்தார்கள் என்பதை நம்ப முடியவில்லை. விசாரிக்கிறேன்.

கல்கி: 42 இல் தியாகதுர்கம், சேலம் மெயின் ரோடு ஓரத்தில் தர்மலிங்கம் பிள்ளை என்பவர் ஒரு வீடு வாங்கி அனுபவித்து வந்திருக்கிறார். 68 இல் நெடுஞ்சாலைத் துறையினர் அந்த வீடு ஆட்சேபணைக்குரியதென்று நோட்டீஸ் அனுப்பவே, அவர் கள்ளக்குறிச்சி முன்சிப் கோர்ட்டில் கேஸ் போட்டு, அந்த வீடு ஆட்சேபணைக்குரியதல்ல என்று தீர்ப்பும் பெற்றிருக்கிறார். 76 இல் அவர் காலமாகிவிட்டார். இப்போது அவர் மனைவி முனியம்மாளுக்கு 'பி' மெமோ கொடுத்துத் தொல்லை கொடுத்திருக்கிறார்களாமே?

கலெக்டர்: (முகவரியைக் குறித்துக் கொண்டு): விசாரிக்கிறேன்.

கல்கி: திருநாவலூர் பேரூராட்சியிலுள்ள பூ. மாம்பாக்கம் கிராமத்தில் அமைச்சர் ஹண்டேயால் திறந்து வைக்கப்பட்ட மருந்தகம் அன்று மட்டும் இயங்கியதோடு சரி; அதன் பிறகு திறக்கப்படவே இல்லை என்கிறார்கள்.

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: கடலூர் முனிசிபாலிட்டியினர் வாரம் ஒருமுறைதான் தெருக்களைச் சுத்தம் செய்வதாகச் சொல்கிறார்களே?

கலெக்டர்: (முனிசிபல் கமிஷனர் பழனிசாமியைப் பார்க்க, அவர் சொல்கிறார்): அது தவறு. சில சமயங்களில் ஆள் பற்றாக்குறை ஏற்படும் போது சில இடங்களில் ஒன்றிரண்டு நாட்கள் தாமதமாகலாம். அவ்வளவே!

கல்கி: கடலூர் லாரன்ஸ் ரோடில்தான் போக்குவரத்து அதிகம். அதிலுள்ள ரயில்வே கேட்டில் ஒரு மேம்பாலம் கட்டினால் பெருமளவு போக்குவரத்து நெருக்கடியைக் குறைக்கலாமே?

கலெக்டர்: கடலூர், விழுப்புரம், உளுந்தூர்ப்பேட்டை, ஆகிய மூன்று இடங்களிலும் மேம்பாலம் கட்ட வேண்டுமென்று அரசுக்கு ஆலோசனை சொல்லியிருக்கிறோம். விரைவில் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் நம்புகிறோம்.

கல்கி: இத்தனை நேரமும் எங்களது கேள்விகளுக்குப் பதில் சொன்னதற்காக மிகவும் நன்றி. நமது சந்திப்புக்குப் பிறகு நீங்கள் என்னென்ன நடவடிக்கைகளை எடுத்திருக்கிறீர்கள் என்பதைக் கண்டறிய மறுபடியும் நாங்கள் ஒருமுறை 'ரீ — விசிட்' செய்வோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். அனைவருக்கும் நன்றி.

கலெக்டர் (சிரித்துக் கொண்டே): நீங்கள் எப்போது வேண்டுமானாலும் ரீ—விசிட் செய்யலாம். உண்மையில், இத்தனை நாட்களும் எங்களுக்குத் தெரியாத இருட்டுப் பகுதிகளைச் சுட்டிக் காட்டிய உங்களுக்கு நாங்கள்தான் நன்றி சொல்ல வேண்டும். நன்றி! வணக்கம்!

## அடுத்த இதழில்...

சமுதாய நீதி: சட்டத்தால் மட்டுமே சாதிக்க முடியாது!

— நீதிபதி பத்மினி ஜேசுதுரை





பெனஜீர் புட்டோ — பாகிஸ்தான் அரசியலின் போக்கை மாற்றுவாரா?



ஆரோக்கியமேரி

படத்திலுள்ள ஆரோக்கியமேரி கோவை கோட்டை மேடு,
மாலை முரசு ஆபீஸில் மெஷின் மேனாக வேலை பார்க்கும்
ஞானம் என்பவரது 10 வயது பெண் குழந்தை. காய்ச்சல்
வந்து போலியோ என்னும் இளம்பிள்ளை வாதம் வந்த
மறுநாளே, கோவை தெலுங்க பாளையம் ஆஸ்பத்திரியில்
சிகிச்சை செய்து பதினைந்து நாட்களில் பூரண குணமாகி
நன்றாக நடக்கிறது. இந்த மருத்துவ மனையில் வாதம்,
பச்சவாதம், முகவாதம், குதிவாதம், நிமிரவும் குனியவும்
திரும்பவும் முடியாத வலி (கொண்டை வாதம், கீல் வாதம்
(சயாடிகா) வாயுப் பிடிப்பு, இடுப்பு வலி, தோள்பட்டை
வலி, (ஸ்பாண்டிலோசிஸ்) முழங்கால் வலி (ஆர்த்ரைட்
டீஸ்) எல்லா மூட்டுகளிலும் உள்ள வலி சரவாங்கி
(ரொமட்டாய்டு ஆர்த்ரைட்டீஸ், பிறவி ஊனம், முட்டிக்
கால், கால் வில் போல் வளைந்து இருக்கும். கவைக்கால்
(பௌலெக்) முதுகு வளைவு (ஸ்கோலியோசிஸ்) எலும்பு
முறிவு முதலிய நோய்களை அறுவை சிகிச்சை செய்யா
மல் குணமாக்க அணுக வேண்டிய முகவரி:

**டாக்டர் வீ. அர்ஜுனன்,**
**தெலுங்கப்பாளையம் ஆஸ்பத்திரி**
**கோயமுத்தூர் — 641 039.**
**போன்: 23150 & 32150**

## கொசுக்கள் உங்கள் தூக்கத்தைக் கெடுக்கின்றனவா?



**உபயோகியுங்கள் ஓடோமாஸ்-**
**உறங்குங்கள் நிம்மதியாக**

இப்போது 100 கிராம் எக்கானமி பேக்கிலும் கிடைக்கிறது




**ஓடோமாஸ்**
**கொசுக்களின் எதிரி**

BALSARA

CHAITRA-B BLS 546 TAM



# நெருப்பாக நீ

"இன்னும் கொஞ்சம் ஆழமா வெட்டுங்கோ டாக்டர்... ஆளைப் பார்த்தா, ரவிவர்மா வரைஞ்ச கிருஷ்ணனுக்கு வழுக்கை விழுந்த மாதிரி — உருண்டு, திரண்டு அமைப்பா இருக்கேள்... மண்வெட்டியாலே நாலு தரம் தரையைத் தோண்டறதுக்குள்ளே மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கறது..."

ஸ்டேஷன் மாஸ்டரை முறைக்கிறார் டாக்டர்.

அவருக்கென்ன...? சொல்லி விடுவார்... கோடாரியையும், மண்வெட்டியையும் தூக்குகிற சரீரமா இது?

அலுங்காமல், நலுங்காமல், நாற்காலியில் அமர்ந்தபடியே, மருந்து எழுதித் தந்தே — எத்தனையோ உயிர்களை இறைவனடி சேர்த்திருக்கிறாரே தவிர — இப்படி — மண்ணைத் தோண்டி, எப்பொழுதோ செத்தவனின் ரிஷிமூலத்தை ஆராய்ந்ததில்லையே!

எல்லாம் இந்த ஸ்டேஷன் மாஸ்டரால் வந்த வினை...

சரிகை வேட்டியை மடித்துக் கட்டி, ஜிப்பாவின் கைப் பகுதியை முழங்கை வரையில் மடக்கிக் கொண்டு, வியர்வை வெள்ளமாய்ப் பெருக — தாம் தோண்டிய இடுப்பளவு பள்ளத்தில் மூச்சு வாங்க நிற்கிறார் டாக்டர்.

கையில் லாந்தர் விளக்குடன், குளித்து, சந்தன குங்குமப் பூச்சும், முதல் நாள் ஜமீன்தார் பணத்தில் வாங்கிய பத்தாறு வேஷ்டியுமாய், டாக்டர் — வெளியே தோண்டிப் போட்ட மண்மேட்டின் மீது குத்துக்காலிட்டு உட்கார்ந்திருக்கிறார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"யோவ்! நல்லாத் தெரியுமா... இந்த இடம்தானா...?"

"பிங்களை ஒரு நாளும் பொய் சொல்லாது... இன்னும் ரெண்டு அடிக்கு வெட்டும்..."

"இப்பவே தண்ணீர் ஊத்தெடுக்குது.. மேஸ்திரி நல்லசிவம் — நகைங்களை இங்கேதான் புதைச்சான்கறதுக்கு என்ன ருசு...?"

"அதான் சொன்னேனே... முந்தா நாள் அந்தப் பொண் இன்பாவும், மாதையனும் இங்கே — இந்த இடத்தைச் சுட்டிக் காமிச்சுப் பேசினாங்கன்னு... டாக்டர்வாள்... எனக்குள்ளே ஒரு இட்சிணி குரல் கொடுத்துண்டேயிருக்கு... இந்தப் பொண்ணு இன்பா — அந்த அசட்டுப் பிள்ளையாண்டான் நந்துவை லவ் பண்ணி, கல்யாணம் பண்ணிக்கற உத்தேசத்தோட இங்கே வரல்லே..."

"பின்னே..."

"ஒண்ணு — அவ ரகசியப் போலீசைச் சேர்ந்தவளா இருக்கணும்; இல்லே, நம்மைப் போல் அவளும் இந்த நகைங்களைத் தேடற நோக்கத்தோட வந்திருக்கணும்... இல்லேன்னா — தேமேன்னு ஜமீன் சொத்தைத் தின்னுட்டு, நந்துவோட வயல் வரப்புல, தென்னந் தோப்பு, மாந்தோப்புல லவ் பண்றதை விட்டுட்டு... இந்த மாதையன் கூடச் சுத்துவானேன்..."

"எனக்குத் தலை சுத்தறது ஓய்..."

"பின்னே... இருபது வருஷங்களுக்கு முன்னால் தொலைஞ்ச நகைகளைத் தேடி எடுக்கறேன்... எத்தனையோ கஷ்டப்பட்டு இடத்தைக் கண்டுபிடிச்சிருக்கோம்... விடிகாலை மூணு மணியில இருந்து அஞ்சு மணி வரைக்கும் பிரும்ம முகூர்த்தம்னு சொல்லுவா... இந்த நேரத்துல என்ன காரியம் செஞ்சாலும் அது ஜெயம்தான்..."

டாக்டர், தலையை உயர்த்தி ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்க்கிறார்.

தெரிந்தோ, தெரியாமலோ கூட்டு சேர்ந்தாகிவிட்டது... அந்தக் கணத்தில், ஒரு ஜோஸியனை நம்பி, அர்த்த ராத்திரியில், ஆற்றங்கரையில் குழி வெட்டுகிற அளவுக்குத் தான் எப்படி மூளை கெட்டுப் போனோம் என்று வெட்கமாகக் கூட இருக்கிறது.

அவர், தோண்டுவதை நிறுத்தி விட்டு — பள்ளத்தை விட்டு மேலேறி வருகிறார்.

"ஐயய்யோ.... பொழுது விடிய இன்னும் அரை மணி நேரம்தான் இருக்கு... அதுக்குள்ளே அரைகுறை வேலை செஞ்சுட்டு வந்து நின்னா எப்படி...?"

ஸ்டேஷன் மாஸ்டர் உண்மையிலேயே பதறிப் போகிறார்...

"என்ன ஸ்வாமீ..."

"யோவ்! இப்ப நான் கேட்கிற கேள்விக்கெல்லாம் பதில் சொல்லும்..."

"கேள்வி கேட்கிற நேரமா இது... பொழுது விடியறதுக்குள்ளே நாம் இங்கேயிருந்து கிளம்பியாகணும்..."

"இப்பவே கிளம்புவோம்... வாரும்..."

"பள்ளத்தை மூடவே இல்லையே..."

"அவசியமில்லே... ஜமீன்தார் கேட்டா, ஸ்டேஷன் மாஸ்டரைப் போட்டு மூடறதுக்காகத் தோண்டினேன்னு சொல்லிட்டுப் போறேன்.. கிளம்பும்..."

**கா**ர், டாக்டரின் வீட்டை நோக்கிப் பறக்கிறது...

"இப்பக் கேட்கறேன்... ஜமீன்தார் மங்களாம்பாளைத் தீர்த்துடணும்னு சொன்னப்ப அதுக்குத் திட்டம் தீட்டிக் கொடுத்தது யாரு...

அடியைப் பிடிடா பாரத பட்டான்னு நீர் ஆரம்பத்துக்குப் போயிட்டீரா...? சரி, சொல்றேன். நான் திட்டம் போட்டுக் கொடுத்தேன். நீர் விஷத்தைக் கொடுத்தீர்..."

"அவர்தான் விஷத்தை உபயோகிக்க மனசு வரலைன்னு திருப்பித் தந்துட்டாரே..."

ஸ்டேஷன் மாஸ்டர், டாக்டரைக் கருடப் பார்வையாய்ப் பார்த்தார்...

"உங்களை விஷயம் தெரிஞ்ச ரகத்துல சேர்த்துக்கிறதா.. இல்லே ஒண்ணுமே தெரியாத அப்பாவி ரகத்துல சேர்க்கிறதா, இல்லே தெரிஞ்சும் தெரியாத மாதிரி வேஷம் போடற ரகத்துல சேர்க்கிறதான்னு தெரியலே... ஜமீன்தார் உங்க கண்ணுல மண்ணைத் தூவறதுக்காக விஷத்தைத் திருப்பிக் கொடுத்திருக்கலாம் இல்லே? டாக்டர் சார்... ஏதோ இந்தக் கட்டை, கவர்ன்மென்ட் கொடுக்கிற கோமாளி டிரஸை மாட்டிண்டு, ஒரு கையில் கொடியும், இன்னொரு கையில் சிக்னல் விளக்குமா மூஞ்சூறு மாதிரி அலையறேன்னு தப்பா எடை போட்டுடக் கூடாது. நான் எங்கேயோ இருக்க வேண்டியவன்..."

ஸ்டேஷன் மாஸ்டர், இருபது வருஷங்களுக்கு முன்னால், தான் போட்டுத் தந்த திட்டத்தை மறுபடியும் யோசித்துப் பார்க்கிறார்.

ஆகா... என்ன அருமையான திட்டம் அது?

ஜமீன்தாரும், அப்பொழுது, ஏன்—எதற்கு என்று கேட்காமல் அவர் சொன்னபடியெல்லாம் கேட்கச் சித்தமாயிருந்தாரே...

"ஜமீன்தார்வாள்... நீங்க என்ன செய்யணும்னா—எதுக்கும் அதைரியப் படக்கூடாது. முதல்லே புவனம்மாவுக்கு உடம்பு சரியில்லைன்னும், டவுன் ஹாஸ்பிடலுக்கு அழைச்சிண்டு போறதாச் சொல்லியும், நாலஞ்சு தடவை டாக்டர் காருல போயிட்டுவாங்கோ... நடுவுல டாக்டரே ஹாஸ்பிடலுக்கு அழைச்சிட்டுப் போய்க் கொண்டு விடட்டும். ஏன்னா, திடீர்னு அம்மாவைக் காணோம்னு குழந்தைகள் அலறப்படாது பாருங்கோ..."

"சரி..."

"திட்டப்படி டாக்டர் தர்ற மருந்தை ஏதாவது ஒரு பானத்துல கலந்து, ஜமீன்தாரிணிக்குக் கொடுத்துடுங்கோ... நாலு மணி நேரத்துல மருந்து வேலை செய்யும்... மெதுவா மாடிக்கு அழைச்சுண்டு போயிடுங்கோ. புவனம்மாவுக்கு ஜமீன்தாரிணியோட நகைகளைப் போட்டு, புடவையைக் கட்டி, ராத்திரி பதினொரு மணிக்கு வீட்டை விட்டுப் புறப்படுங்கோ... புறப்படறதுக்கு முன்னாலே டாக்டருக்குப் போன் பண்ணிட்டீர்னா — நீங்க, மாதையனோட ஸ்டேஷனுக்கு வர்ற சமயத்துல — டாக்டர் காரோட வந்து ஜமீன்தாரிணியோட சடலத்தை டிஸ்போஸ் பண்ணிடுவாரு... ஞாபகமா புவனம்மா டிரஸ்ஸை ஜமீன்தாரிணிக்கு மாத்திடுங்கோ..."

"உம்..."

"ஏன் சுருதி இறங்கறது...?"

"இல்லே... வீட்டுல யாராவது கவனிச்சிட்டா ஆபத்தில்லையா...?"

"எப்படி...? ஜமீன்தாரை நெருங்க ஒருத்தராலே முடியுமோ... , ராத்திரி பதினொரு மணிக்கு, ஜமீன்தாரிணி வெல்வெட் சால்வையைப் போர்த்திட்டு வண்டியில ஏறினா, கிட்டப் போய் முகத்தைப் பார்க்க ஒருத்தனுக்குத் தைரியம் வருமோ...?"

"சரி... டாக்டர் எப்படி சடலத்தை...? வீட்டுலேர்ந்து அப்புறப்படுத்துவார்... சிரமமில்லையா?"

"நீங்கதான் போன் பண்ணிடறீர்... பதினொரு மணிக்கு டாக்டர் வருவார்... கூடவே டாக்டர் மிஸஸும் வருவா... டாக்டர் மிஸஸ் கீழே வேலைக்காரியோடப் பேச்சுக் கொடுத்துண்டிருக்கட்டும்... டாக்டர் மாடிக்குப் போயிட்டு உடனே இறங்கி வந்து, புவனா நினைப்பு நீச்சில்லாம இருக்கிறதாச் சொல்வார். அவங்க மாடிக்கு ஏர்ற சமயத்துல பக்கத்துல இருக்கிற மெயினை டாக்டர் ஆஃப் பண்ணிடுவார். வேலைக்காரி விளக்கு



கொண்டு வர்றதுக்குள்ளே — டாக்டர் மிஸஸ் டார்ச் லைட்டைக் காமிக்க டாக்டர் — ஜமீன்தாரிணி சடலத்தைக் கீழே இறக்கி காருலே வச்சுப்பார்... அடுத்த நிமிஷம் பறந்துடுவார்... நீங்க புவனம்மாவை அடுத்த ஸ்டேஷன்லே என்கிட்டே ஒப்படைக்கிறேன்... நான், ராவோட ராவா — அவங்களை டாக்டர் இட்ட ஒப்படைச்சுட்டு வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கறேன். சரியாய் ஒரு வாரம் கழிச்சு ஊர் திரும்பி, 'நகைகளோட ஜமீன்தாரிணி எங்கேயோ ஓடிட்டதா, ஊரைக்கூட்டி ஒப்பாரி வைக்கிறீர்... சரிதானா...?''

'சரிதான்' என்று பெரிசாய்த் தலையை ஆட்டினாரே லோகநாதன்.

''இதுலே எல்லாம் டயம் கான்ஷியஸ்னஸ் இருக்கணும்... மருந்தை முன்னாடியே கொடுத்துட்டா, அப்புறம் மாடியிலேருந்து சடலத்தை ஒருத்தராலே இறக்கிக் கொண்டு வர முடியாது — கனத்துப் போயிடும்... அதே மாதிரி — பதினொன்று, அஞ்சு ரயிலைப் பிடிக்கிற



சிறுமி: (விமானத்தில்) இந்த ஆன்ட்டி டிக்கெட் போக மீதிச் சில்லறை இல்லே' என்பதாலே அதற்குப் பதில் சாக்லெட் தருங்களா? — லலிதா செல்லப்பா

மாதிரி வரணும்... வேட்டாச்சுன்னு வண்டியைக் கோட்டை விடணும்... அஞ்சு, பத்து நிமிஷம்னு நான் நிறுத்தி வைக்கலாம். அதுக்கு மேல முடியாது... அப்புறம் இதுவே ஒரு விவகாரமாப் போயிடும்... அதுக்காகச் சுருக்க வந்துட்டமான்னு அதுவும் அவஸ்தை.... ஜமீன்தாரிணி முகத்தை மாதையன் பார்க்கறதுக்கு சான்ஸ் கொடுக்கக் கூடாது பாருங்கோ...''

''அதுவும் சரிதான்...''

''இந்தாங்கோ. இந்த ரட்சையைக் கட்டிக்கோங்கோ... மனசுல இருக்கற பயம் நீங்கும்... சரியா, ராத்திரி பதினொரு மணிக்கு ஸ்டேஷன்லே இருப்பேன்... அன்னிக்கு எனக்கு டியூட்டி இல்லே... அப்பாச்சு பார்த்துப்பான்... நான், உங்களுக்குப் பக்கத்துக் கம்பார்ட்மெண்ட்லே. அடுத்த ஸ்டேஷன் வரைக்கும் வர்றேன்...''

''......''

''நகைகளைப் பத்தியோ, புவனாவைப் பத்தியோ கவலையே பட வேண்டாம் நீங்க. என்கிட்டே இருக்கறதும், பாங்க்லே இருக்கறதும் ஒண்ணுதான். ஒரு திருகாணி குறையாது...''

எல்லாவற்றுக்கும் சரி, சரியென்ற லோகநாதன் அப்புறம் என் மனசு மாறினார்...''

ரிஸர்வ் செய்த டிக்கெட்டுகளைக் கூட வாங்கிக் கொண்டார்... ஆனால் —

நாலைந்து நாட்களில், மருந்துப் பொட்டலத்தை மறுபடியும் டாக்டரிடமே கொண்டு வந்து கொடுத்து விட்டார்.

''என்... திடீர்னு முன்னே வச்ச காலை இழுத்துக்கறீர்...?''

மனசு வரல்லே... கூடுமானவரைக்கும், அவ கிட்ட சண்டை போட்டாவது நகையை வாங்கப் பார்க்கறேன். கொலை வேண்டாம். இப்படியொரு யோசனை நமக்குள்ளே இருந்ததையே மறந்துடுவோம்...''

டாக்டரும், ஸ்டேஷன் மாஸ்டரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''அப்ப அந்த டிக்கெட்டை கான்ஸல் பண்ணிடவா...?''

''இருக்கட்டும். நானும் மங்களாம்பாளுமே சேர்ந்து கோவில்களைத் தரிசனம் பண்ணிட்டு வர்றோம். அவளுக்கும் என் மேல் நம்பிக்கை ஏற்படணுமில்லேயா?''

இப்போதும்—இந்த இடத்தில்தான் உதைக்கிறது ஸ்டேஷன் மாஸ்டருக்கு.

''பெண்டாட்டியை அத்தனை க்ரிசணமாய் அழைச்சிட்டுப் போனவர் — திரும்பி வந்ததும், அவ எங்கேயோ ஓடிப் போயிட்டதாத்தானே சொன்னார்?''

''அன்னிக்கு ராத்திரி மட்டும் நீர் ஸ்டேஷன்லே இருந்திருந்தா — அவர் யார் கூடப் போனார்ங்கறதைக் கவனிச்சிருக்கலாம்...''

''ஸ்வாமீ... கல்யாணமான புதுசு. பெண்டாட்டி மோகம். இதை வெட்கத்தை விட்டு, எத்தனை தடவை சொல்லச் சொல்றீர்... மேலும் பகல் டியூட்டி வேறே... இவர்தான் திட்டத்தைச் செயலாக்கப் போறதில்லேன்னு தெரிஞ்சாச்சே... அதுக்கப்புறமும் அண்டங்காக்கா அடைகாக்கிற மாதிரி நான் எதுக்கு ஸ்டேஷனைச் சுத்தி வரணும்னு...''

''இப்ப, நாம சொல்லித் தந்த பாடத்தை நமக்கே படிச்சுக் காட்டறார். மங்களாம்பாளும் நகைகளும் எங்கேங்கற விஷயம் யாருக்குத் தெரிஞ்சிருக்கும்...''

''எனக்குத் தெரிஞ்சு மேஸ்திரி நல்லசிவம்... அவன் ஜமீன்தாரோட தோஸ்து.. ராப்பகல் பாராம, அந்த பங்களாவை அப்ப கட்டிண்டிருந்தவன்... ஒண்ணு, ஜமீன்தார், நகைங்களை அவன் பாதுகாப்புல கொடுத்திருக்கணும்... அவன்தான் இப்ப இல்லே... ரெண்டாவது புவனா... ஜமீன்தார் அன்னிக்கு ராத்திரி என்ன செஞ்சார்ங்கற விவரம் அவளுக்குத் தெரியும்... ஆனா, அவதான் பேச மாட்டேங்கறாளே...''

டாக்டர் பற்களைக் கடிக்கிறார்...

''தெருக்கூத்துக் காரிக்கு அத்தனை திமிர்...''

கார், ஒரு குலுக்கலுடன் டாக்டரின் வீட்டு வாசலில் நிற்க—வாசற்புறத்திலேயே பதற்றத்துடன் நின்று கொண்டிருந்த பரிமளா — காரைக் கண்டதும் ஓடி வருகிறாள்...

''என்னங்க... ஜமீன்தார் போன் செஞ்சாரு... புவனாவுக்கு ரொம்ப ஸீரியஸ்ஸா இருக்காம்... உங்களை உடனே வரச் சொன்னாரு...''

ஸ்டேஷன் மாஸ்டரின் மந்தகாச முகத்தில் கூட இருட்டு...

''இருக்கிற ஒரே யொரு விட்னஸும் போயிடப் போறது டாக்டர்... சீக்கிரமா வண்டியைக் கிளப்புங்க...''

கார், ஜமீனை நோக்கிச் சீறிக் கொண்டு கிளம்புகிறது...

(தொடரும்)

''கங்கிராஜுலேஷன்ஸ்! அடுத்தபடி நீங்கள் எங்களோட வேலை இல்லாப் பட்டதாரிகள் சங்கத்திலே ஆயுள் சந்தாதாரராகச் சேரணும்.''



## வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் சுமபகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




B84.55 Tam

*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்*
*பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !*

# தென்னாற்காடு வளம் பெற...



தென்னாற்காடு மாவட்டம் வளம் பெறுவதற்கு இன்னும் என்னென்ன செய்ய வேண்டும்? இதுகுறித்து அம்மாவட்ட கா.கா.தே.கா. கட்சித் தலைவர் ஆறுமுகத்தின் சார்பில் அக்கட்சியைச் சேர்ந்த செல்வராஜ், பவநாதன், தாமோதரன், நடராஜன் ஆகியோர் நம்மைச் சந்தித்தார்கள்.

**த**ஞ்சைக்கு அடுத்தபடியாகத் தமிழகத்தில் நெல் உற்பத்தியில் சாதனை செய்து கொண்டிருப்பது தென்னாற்காடு மாவட்டம் தான்! இங்குள்ள பெரிய நதிகள் — 3; சிறிய நதிகள் — 4; பெரிய ஏரிகள் — 937; சிறிய ஏரிகள் — 1093.

ஆனாலும் கடந்த பத்தாண்டுக் காலமாகவே இம்மாவட்டத்தின் ஒரு பகுதி மக்கள் குடிநீருக்கும், பாசன வசதிக்கும் வருடத்தின் ஒரு கால கட்டத்தில் தவித்துப் போகிறார்கள் என்பதுதான் உண்மை! காரணம் என்ன? வராக நதி நீரைத் தேக்கி வைக்கும் வீடூர் அணை, கோமுகி ஆற்றில் கட்டப்பட்டுள்ள கோமுகி அணை ஆகிய இரண்டு அணைகளைத் தவிர, இம்மாவட்டத்தில் வேறு அணைகளே இல்லாததால் மழைக்காலங்களில் கிடைக்கும் நீர் யாருக்கும் பயன்படாமல் கடலில் கலந்து வீணாகி விடு கிறது!

அடிக்கடி தூர் எடுத்துப் பராமரிக்கப் பட வேண்டிய ஏரிகளெல்லாம் பல்லாண்டுக் காலமாகத் தூர் எடுக்காமல் போடப்பட்டு விட்டதால் ஆண்டு தோறும் ஏரிகளில் தேங்கும் நீரின் கொள்ளளவும் குறைந்து கொண்டே வருகிறது. நீரைப் பாசனத்திற்குக் கொண்டு செல்லும் வாய்க்கால்களும் பராமரிக்கப் படாததால் — நவீனப்படுத்தப் படாததால் இருக்கிற நீரிலும் ஒரு பகுதி வீணாகிப் போகிறது. இவற்றோடு, அங்கங்கே உள்ளவர்கள், தத்தமது பணபலத்தாலும், அரசியல் செல்வாக்காலும் அங்கங்கேயுள்ள ஏரிகளை ஆக்கிரமித்துக் கொண்டு வருவதாலும் ஏரிகளின் கொள்ளளவு படுமோசமாகக் குறைந்து கொண்டு வருகிறது. இவை உடனடியாகத் தடுத்து நிறுத்தப்பட வேண்டிய அநியாயமல்லவா? ஆனால் அரசோ, பல இடங்களில் இந்த அத்துமீறிய ஆக்கிரமிப்பாளர்களுக்குப் பட்டா கொடுத்துக் கொண்டிருப்பதை என்ன சொல்ல!

இதுபோன்ற கொடுமைகளால்தான் வறட்சியின் பிடியிலிருந்து மக்கள் தப்பிக்க முடியாமல் போய்விடுகிறது. இந்த வறட்சியைப் போக்க முடியாதா? ஏன் முடியாது? பெண்ணையாற்றிலும் மணிமுத்தாற்றிலும் அணை கட்டினால், விருத்தாசலம், திட்டக்குடி, விழுப்புரம், பண்ருட்டி, கடலூர் தாலுகாக்களில் சுமார் இருபத்தைந்தாயிரம் ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும். அரசாங்கத்தால் கிடப்பில் போடப்பட்டிருக்கும், பம்பையாற்றின் குறுக்கே அணை கட்டும் திட்டத்தைச் செயல்படுத்தினால் விழுப்புரம் தாலுகாவில் சுமார் ஆறாயிரம் ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும்! மரக்காணத்தில் ஓடும் இராமர் ஓடையின் குறுக்கே தடுப்பு அணையொன்று கட்டினால் மரக்காணத்தைச் சுற்றியுள்ள மூவாயிரம் ஏக்கர் நிலம் பயனடையும்! இத்தனை ஏன்? இப்போது நெய்வேலி இரண்டாவது சுரங்கத்திலிருந்து வெளியேறும் தண்ணீர் விளை நிலங்களில் தேங்கிப் பாழடிப்பதைத் தடுத்து, அதை ஒழுங்காகப் பயன்படுத்தினாலே புவனகிரிப் பகுதியில் சுமார் இருபத்தெட்டாயிரம் ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும்! இவற்றோடு இருக்கிற கால்வாய்களை ஆழப்படுத்தி, ஏரிகளைத் தூரெடுத்து, ஆறுகளின் கரைகளைப் பலப்படுத்தினாலே மழைக்காலங்களில் ஏற்படும் வெள்ளப் பெருக்கால் பாதிக்கப்படும் ஆயிரக்கணக்கான ஏக்கர் பயிர்களைக் காப்பாற்ற முடியும்!

ஆக, வறட்சி என்பது இயற்கை வளங்களை நாம் சரிவரப் பயன்படுத்திக் கொள்ளாததால் ஏற்படும் செயற்கை வறட்சி தானே தவிர, தென்னாற்காடு மாவட்டத்தைப் பொறுத்தவரை இயற்கை வறட்சி இல்லை; இல்லவே இல்லை!

படகுப் போட்டி — ஐலேசா
பஸ்டு வரோம் — ஐலேசா

வாழ்க்கைப் படகு — ஐலேசா
வெற்றி பெறும் — ஐலேசா

ஆண்டை உண்டு — ஐலேசா
அஞ்ச வேண்டாம் — ஐலேசா

கூட்டு முயற்சி — ஐலேசா
கோடி நன்மை — ஐலேசா

எதிர்ப்பக்கம் கேரளப் படகுப் போட்டி — வண்ணப்படம்:

டி. தண்டபாணி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani.
Editor: K. Rajendran.

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்க செய்யுங்கள்!

புதியது




உண்மையான புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

**மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.**

## ஸின்த்தால் மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej